# சாகுந்தலம்

(கவிதை நாடகம்)

துருவன் கோ. கோபாலகிருட்டிணன்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# சாகுந்தலம்
## (கவிதை நாடகம்)

துருவன் கோ. கோபாலகிருட்டிணன்

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை – 600 113

**டாக்டர் ஜெ ஜெயலலிதா அறக்கட்டளைச் சொற்பொழிவு**

(அறக்கட்டளை நிறுவியோர் : மேனாள் கல்வியமைச்சர் மாண்புமிகு கே. பொன்னுசாமி)

வரிசை எண் : 5 நாள் 24.02.2014

---

## நூல் விவரக்குறிப்பு


| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | சாகுந்தலம் (கவிதை நாடகம்) |
| ஆசிரியர் | : | துருவன் கோ. கோபாலகிருட்டிணன் எம்.ஏ.<br>உதவி ஆட்சியர் (ஓய்வு)<br>சென்னை – 600 026<br>தொலைபேசி : 9080749909 |
| பொதுப் பதிப்பாசிரியர் | : | முனைவர் கு. சிதம்பரம்<br>உதவிப் பேராசிரியர்<br>அயல்நாட்டுத் தமிழர் புலம்<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>தரமணி, சென்னை 600 113 |
| வெளியீட்டாளரும் பதிப்பு உரிமையும் | : | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>இரண்டாம் முதன்மைச் சாலை<br>மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்<br>தரமணி, சென்னை 600 113<br>தொலைபேசி எண் 044/22542992 |
| வெளியீட்டு எண் | : | 769 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதற்பதிப்பு |
| பதிப்பு ஆண்டு | : | 2014 |
| பயன்படுத்திய தாள் | : | 18.6 கிகி டி.என்.பி.எல் வெள்ளை மேப்லித்தோ |
| நூலின் அளவு | : | 1/8 டெம்மி |
| எழுத்தின் அளவு | : | 10 புள்ளி |
| பக்க எண்ணிக்கை | : | 104 + 8 = 112 பக்கங்கள் |
| அச்சுப்படிகளின் எண்ணிக்கை | : | 1200 |
| விலை | : | ரூ. 50/– (ரூபாய் ஐம்பது மட்டும்) |
| அச்சகம் | : | ஸ்ரீசரவணா பிரிண்டர்ஸ்<br>144, தம்புத் தெரு<br>சென்னை 600 001 |
| பாடம் | : | கவிதை நாடகம் |


---

அறக்கட்டளைச் சொற்பொழிவாளர் கருத்துகளுக்கு நிறுவனம் பொறுப்பன்று

**முனைவர் கோ. விசயராகவன்** எம்.ஏ., எம்.ஃபில், பி.எட்., பிஎச்.டி.
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை 600113

# அணிந்துரை

நான் 2004ஆம் ஆண்டில் காஞ்சிபுரத்தில் தமிழ் வளர்ச்சித் துறையில் உதவி இயக்குநராக பணியாற்றுகையில், தமிழறிஞர்கள் மற்றும் கலைஞர்கள் கோரிக்கைகள் தொடர்பாக சார்நிலை அலுவலர்களின் அறிக்கைகளைப் பெற்று மாவட்ட ஆட்சியரின் பரிந்துரைக் கடிதத்தை அரசிற்கு உடனுக்குடன் அனுப்புகிறார் ஒருவர் என்றும் அதுமட்டுமல்லாமல் தமிழில் அலுவலக நடைமுறைகள் முழுமையாக இருத்தல் வேண்டும் என்று அவர் செயல்படுவதாகப் பல பேர் என்னிடம் கூற நான் சென்று அவரைக் காண நேர்ந்தது. அவர்தான் காஞ்சிபுர மாவட்ட ஆட்சியரின் நேர்முக உதவியாளர்; இன்று தமிழ்த் தொண்டாற்றும் இந்நூலின் ஆசிரியர்.

தமிழ் வளர்ச்சித் துறை மற்றும் பண்பாட்டுத் துறை நிகழ்ச்சிகள் நடத்த ஒத்துழைப்பு நல்குவதோடு மட்டுமல்லாமல் அவற்றில் பங்கேற்கவும் செய்வார். காஞ்சிபுர மாவட்ட ஆட்சியர் திரு. இரா. வெங்கடேசன் இ.ஆ.ப. அவர்களின் அனுமதியோடு அனைத்து வட்ட அலுவலகங்களுக்கும் கம்பித்தடமற்ற வானொலிக் கருவியின்மூலம் அலுவலர்கள் ஆற்றவேண்டிய பணிகள் குறித்து நற்றமிழில் அறிவுறுத்தி, அவர்களைத் தமிழில் பதிலளிக்க வைத்து, எங்கும் தமிழ், எதிலும் தமிழ் என்ற நற்கொள்கையைப் பின்பற்றினார். கைப்பேசியில் தமிழில் குறுஞ்செய்தி அனுப்பும் நடைமுறைத் தொடர்பான அவரது ஆய்வுக் குறிப்பேட்டினைக் கண்டு மகிழ்ந்து, முன்னர் அதனைத் தமிழ் வளர்ச்சித் துறைக்குப் பரிந்துரை செய்துள்ளேன்.

அவரது படைப்பாற்றலை இறைப்பாடல்கள், கவிதைகள், கட்டுரைகள் மூலம் வெளிப்படுத்தியுள்ளார். அவர் இளம்வயதில் எழுதிய ‘சாகுந்தலம்’ எனும் இக்கவிதை நாடகம் சந்தமும் சாரமும் கற்பனை வளமும் அமையப் பெற்றுள்ளது. அவரது தமிழ்நடை எளிமையாக, தெளிவாகவும் அமைந்துள்ளது. பிறமொழிப் படைப்புகள் தமிழில்இடம்பெற வேண்டும் என்ற உயர்நோக்கில் எழுதப்பட்டுள்ள இந்நாடகம், படிப்போரின் சிந்தை கவரும் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை.

இந்நாடகத்தில் பலவாய்க் காணக்கிடக்கின்ற தமிழ்ப் பெருமை பேசும் கவிதைகளுக்கு ஒரு சான்று: சகுந்தலைக் காதலைக் குலைக்கப் பாண்டிநாட்டிலிருந்து வரும் பைசாசத்தின் வாய்மொழியாகக் கவிஞர் காட்டுவது.

**எத்தனை முனிவர் ஒற்றைக் காலில் -**
**சித்தனை இறைஞ்சுவர் தமிழராய்ப் பிறக்க! - அது விடு**
**கொக்கும் நீரிடை ஒற்றைக் காலில்**
**கொடுந்தவம் புரியும் தமிழராய்ப் பிறக்க!** (காட்சி 3)

தமிழ்நாட்டு நால்வகை நிலவளத்தைக் காட்டப் பைசாசம் கேட்கும் நால்வகைப் பாட்டு! கவிஞரின் அழகிய கற்பனையின் வெளிப்பாடு (காட்சி 4).

காட்சி 7இல் அவர் எண்ணவியலாத் தமிழ் பெருமையை எண்ணுள் அடக்கி வியக்கின்றார். இந்நூலாசிரியரின் தமிழ்ப்பற்று பாராட்டுதலுக்குரியது.

இந்நூல் மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் மாண்புமிகு அம்மா அவர்களின் 66ஆவது பிறந்தநாள் பெருவிழாவை முன்னிட்டு சிறப்பு வெளியீடாகவும் அமைகிறது.

மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் புரட்சித் தலைவி அம்மா அவர்கள் தமிழ் மீதும், தமிழர் மீதும், தமிழ்ப் பண்பாட்டின் மீதும் கொண்டுள்ள அன்பும் கருணையும் அளப்பரியன. தமிழின் மேம்பாட்டுக்கெனப் பல திட்டங்களை மேற்கொண்டு செயலாற்றி வருகின்றார்கள். ஒல்லும்வகையெல்லாம் தமிழ் வளர்த்துவரும் மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் புரட்சித் தலைவி அம்மா அவர்களுக்கு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் சார்பில் நன்றிகளைப் பதிவு செய்கின்றோம்.

தமிழ் வளர்ச்சிக்கும் இந்நிறுவன வளர்ச்சிக்கும் ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையைக் காட்டிவரும் பள்ளிக்கல்வி, தமிழ் வளர்ச்சி மற்றும் தமிழ்ப் பண்பாட்டுத்துறை அமைச்சரும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தலைவருமாகிய மாண்புமிகு கே.சி. வீரமணி அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சியில் எங்களை வழிநடத்திவரும் தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அரசுச் செயலாளர் முனைவர் மூ. இராசாராம் இ.ஆ.ப. அவர்களுக்கும் எம் இனிய நன்றிகளை உரித்தாக்கிக் கொள்கிறோம். இந்த அரிய நூலை கணினியில் வடிவமைத்த நிறுவன உதவியாளர் மற்றும் தட்டச்சர் திருமதி. எ.ம. லட்சுமி அவர்களுக்கும், மெய்ப்பு திருத்தம் செய்த முனைவர் ஆ. தசரதன் அவர்களுக்கும், அழகுற அச்சிட்டுத் தந்த ஸ்ரீசரவணா அச்சகத்தாருக்கும் என் பாராட்டுகள்.

இயக்குநர்



## ஆசிரியர் குறிப்பு

இக்கவிஞர் தஞ்சை மாவட்டம் நாச்சியார் கோவில். வணிகப் பெருமகனார் என்.கே.ஆர். கோவிந்தராஜிலு – நாச்சியார் அம்மாளின் மூன்றாம் மகனாக 24.10.1948ஆம் ஆண்டு பிறந்தார். அவருடைய தந்தை தந்த செல்வத்துள் தலையாய செல்வமான திராவிட வேதம் – நாலாயிர திவ்வியப்பிரபந்தம் அவருக்குத் தமிழ் உணர்வை சிறுவயது முதலே ஊட்டியது. அதுமுதல் பழந்தமிழ் இலக்கியங்களை ஆர்வமுடன் பயிலத் தொடங்கினார்.

தமிழ் முதுகலை படித்து தமிழால் தமிழக அரசின் இரண்டாம் நிலை அலுவலர் தேர்வு பெற்று வருவாய்த் துறையில் சென்னை, கடலூர், காஞ்சிபுரம் மாவட்டங்களில் உதவி ஆட்சியர் நிலையில் பணிபுரிந்து ஓய்வு பெற்றார். சங்க இலக்கியங்களின் தாக்கம் சமய இலக்கியங்களில் இருப்பதுக் கண்டு அவற்றில் 40 வருடங்களாக தமிழிசை ஆய்வை மேற்கொண்டுள்ளார். தெய்வத் தமிழ் பனுவல் 400 எழுதியுள்ளார். அவற்றில் சில இசைத் தட்டுகளில் வெளிவந்துள்ளன. தமிழ்த்திரை இசை பாடகர்களை பாடவைத்து வானொலி, தொலைக்காட்சியில் பல நிகழ்ச்சிகளை நடத்தியுள்ளார்.

அகநானூறு, புறநானூறு, கம்பராமாயணம், தேவாரம், திருவாசகம், திவ்வியப்பிரபந்தம், திருப்புகழ் ஆகிய புனிதத் தமிழ் நூல்களின் பாடல்களும் பதிகங்களும் பாயிரங்களும் தமிழிசையில் நிலைப்பெறச் செய்யப் பெருவிருப்பு கொண்டுள்ளார்.

1976 ஆண்டில் தமிழில் முதற்சுப்ரபாதமும், 1982 ஆம் ஆண்டில் தமிழ் மணமந்திரமும் எழுதித் தமிழ்த் தலைவர்களின் பாராட்டைப் பெற்றுள்ளார். சாகுந்தலம், மந்தரையின் போதனையால் சப்தரிஷி ராமாயணம், தியாகச்சுடர், பைராம்கான், பாரதம் காப்போம், சேற்றுத்தாமரை மற்றும் இராமகிருஷ்ண விஜயம் ஆகிய வரலாற்று சமூக நாடகங்களை எழுதியுள்ளார்.

43 ஆண்டுகளுக்கு முன் அவர் எழுதிய 'சாகுந்தலம்' கவிதை நாடகம், இன்று உலகத் தமிழாராய்ச்சி நிறுவன வெளியீடாக வந்ததை தம் தமிழ் பணிக்குக் கிடைத்த பெரும் பரிசிலாகக் கருதி மகிழ்கின்றார்.

# முன்கதைச் சுருக்கம்

முன்னொரு நாளில் மாமுனி விசுவாமித்திரரின் தவவலிமையைக் குலைக்க, அவர் சிந்தனையைக் கலைக்க, வானவர்கள் பேரழகி மேனகையை அவர்பால் அனுப்பினர். மன்மதனின் ஐம்மலர்க் கணைகள் மேனகையின் கண்களிலிருந்து முனிவன்பால் ஏவப்பட்டன. காதல் வலையில் விழுந்த விசுவாமித்திரரும் தம் தவத்தினின்று வழுவிட காலவோட்டத்தில் மேனகை ஓர் பெண் மகவை ஈன்றாள். தம் குழந்தையைக் கண்டு மகிழ்ந்து கொண்டாட வேண்டிய விசுவாமித்திர முனிவரோ, தம் தவத்திற்கு ஏற்பட்ட களங்கம் அதுவென எண்ணி இதயத்தை இரும்பாக்கிக்கொண்டார். மேனகை, முனிவருக்கு அவள் பெற்ற குழந்தையைக் காட்டினாள். ஆனால் அவரோ கண்களை மறைக்க ஒரு கையையும்; தாம்கொண்டிருந்த காதலை மறுக்க ஒரு கையையும் காட்டி, மேனகையையும் அவள் குழந்தையையும் புறக்கணித்தார். மேனகை வானவர் உலகு செல்ல வேண்டியிருந்ததால், தான்பெற்ற பச்சிளம் குழந்தையைக் கானகத்தில் விட்டகன்றாள்.

குழந்தையின் அழுகுரல் கேட்ட சகுந்த பறவைகள் தம் மழலைகள்தான் தங்களைக் காணாது வருந்துகின்றனவோ என நினைத்து அக்குழந்தையின் அருகே வந்து, அதன் மேல் கதிரவனின் வெம்மைபடாதிருக்கத் தம் சிறகுகளால் போர்த்தி பாதுகாத்து நின்றன. அவ்வழியே வந்த கன்வ மகரிஷி, அவ்வரிய காட்சியைக் கண்டார். தமக்கு பெண் மகவு இல்லை என்ற குறை நீங்க, கடவுள் தந்த பரிசாக அக்குழந்தையை நினைத்தார். சகுந்த பறவைகள் அக்குழந்தையைப் பாதுகாத்ததனால் `சகுந்தலை' என்று தம் வளர்ப்புச் செல்விக்கு பெயர் சூட்டினார். சகுந்தலை, நாளொரு நலமும் பொழுதொரு பொலிவும் பெற்று வளர்ந்து வந்தாள்.

காதல் கடவுளாகிய `மன்மதன்' சிலகாலம் 'காதல் சலிப்பு'க் கொண்டிருந்தான் என்பதற்குச் சான்று.... சிலப்பதிகாரத்தில் மாதவியின் அரங்கேற்றக் காதை காட்டும் `காமன் ஆடிய பேடி ஆடலும்' எனும் பாடல் வரிகள். பூவுலகில் கானகச்செல்வி சகுந்தலைக்கும் கங்கை நாடன் துஷ்யந்தனுக்கும் காதல் தொடர்பு உண்டாக்கி அவர்கள் இன்புற்றிருப்பதை, மாரனுக்குக் காட்டி அவன் மனத்தே புகுந்த `காதல்

சலிப்பை' நீக்கிட மன்மதனை பூவுலகிற்கு அழைத்து வருகிறாள் இரதி. அதேநேரத்தில் பாண்டிய நாட்டில் ஓர் பைசாசம் இல்லற இன்பம் தனக்கு கிட்டாததால், பிறரின் காதலின்பத்தைக் குலைத்து, அதன்மூலம் குரூர இன்பம் பெற நினைத்து, காதலரின் காதலைக் கெடுக்க தமிழகத்தில் இயலாது என்பதால், வடபுலம் நோக்கி விரைகிறது என்று இந்நாடகம் ஆவலைத் தூண்டும் விதமாகத் துவங்குகிறது.

சகுந்தலைக்கும், துஷ்யந்தனுக்கும் ஏற்பட்ட `பொருந்திய காதலை' வளர்க்க இரதியளும், அக்காதலைக் சிதைக்க பாண்டிய நாட்டுப் பைசாசமும் முயற்சி மேற்கொண்டனர். பிறகு என்ன நடந்தது என்பதை இக்கவிதை நாடகத்தைப் படித்து அறிவோம்.

# காவியக்கவிஞன் காளிதாசன்

கல்வி அறிவில்லாதவர் கவியாக முடியுமா? கற்பனை வானில் சிறகடித்துப் பறந்து நற்கவிதை பாட முடியுமா? கட்டுச்சோறுடன் கானகத்தில் ஆடு, மாடு மேய்த்து அறியாமையால் காட்டுமரத்தின் நடுக்கிளை அமர்ந்து, அடிக்கிளை வெட்டிய அறிவிலியை அறிவாளியாகக் காட்டிட, மாடு மேய்த்தவனை மாமேதையாகக் காட்டிட, அவனை மௌனவிரதனாக்கி அவன் அசட்டுத்தனமாய்க் காட்டிய கை அசைவுகளுக்கு காரண விளக்கம் தந்து, வித்யோத்தமா என்ற இளவரசியின் செருக்கு மனத்தில் அம்மதியிலியை மதிவாணனாக இடம்பெறச் செய்தனர், அவளால் அவமானப்படுத்தபட்ட அந்நாட்டுப் புலவர்கள்.

கல்வியில் சிறந்தவன் தனக்குக் கணவனாக வேண்டும் என்று கனவு கண்ட வித்யோத்தமாவின் கற்பனைக் கோட்டை தகர்ந்தது. சூழ்ச்சிச்சூழலில் கணவனின் வெகுளித்தனம் முதலிரவிலேயே வெளிப்பட்டது. வெகுண்டாள்; வேதனைப்பட்டாள்; தற்குறிக் கணவனை வெறுத்து ஒதுக்கினாள்; அதனால் அவன் ஓடினான், தான் உண்டு உறங்கும் ஊர் எல்லை காளியின் கோவிலுக்கு. தாயாக நினைத்த தயாபரியிடம், என்னை ஏன் மூடனாகப் படைத்தாய் தாயே? என்று விம்மலுடன் வேதனைப் பட்டான். பலமுறை முறையிட்டும் பயங்கரி பதிலுரைக்காததால்; தன் கழுத்தறுத்து தற்கொலைக்கு முற்பட்டான்.

கல்மனம் கொண்டவள் அல்லவே காளி! கனிந்து அருளினாள்; கல்விக் கண்ணற்ற அக் கல்லா மூடனுக்கு கவிதை ஊற்றுக் கண்ணைத் திறந்து, மதி தந்தாள்; மறு வாழ்வு தந்தாள்; மாபெரும் இதிகாச புராண காவியங்களைப் படைக்கும் ஆற்றல் தந்து அவனைத் தன்அடிமை ஆக்கினாள். கசடனாய் இருந்தவன் காளிதாசனாக அதன் பின் மாறினான்.

அரிச்சுவடி படித்தறியாதவர் ஆசு கவியானார். அறிவிற்சிறந்த கவிக்கொண்டல் ஆனார். இமையாத விஞ்சயன் காதலையும் இமயமலைச்சாரல் அழகையும் கானக இயற்கை எழிலையும் வானளாவ வருணிக்கும் மேகதூதம் இயற்றினார். மேனகை மகள் சகுந்தலை காதலை அமர காவியம் ஆக்கினார். விக்ரம ஊர்வசியம் உரைத்தார். குமார சம்பவ லீலையைக் காட்டினார். வரலாற்றின் இரகுவம்ச கதை தந்தார்! மாளவிகாஅக்னிமித்ரா என்ற நாடகம் எழுதினார். ருது சம்காரா எனும் பாடற்காவியம் படைத்தார்.

காளிதாசனின் கவிதைப் படைப்புகளைக் கொண்டே அவர் வாழ்ந்த காலத்தைக் கி.பி. 3ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 5ஆம் நூற்றாண்டுக்குள் கணித்தனர் வரலாற்று வல்லுநர்கள். காளிதாசன் என்ற அப்பெரும் புலவன் எவ்வாறு நமக்கு காணக்கிடைக்கின்றார் தெரியுமா? 104 கற்சிற்பங்களின் வடிவில், 30 கவின்மிகு சித்திரங்களின் வனப்பில், 493 கதை மற்றும் கட்டுரைகளில்...

வடஇந்திய உஜ்ஜயினில் வாழ்ந்து, இரண்டாம் விக்கிரமாதித்தன் அரசவை நவரத்தினங்களில் முதல்வராகத் திகழ்ந்து, வடமொழியில் கவித்துவம் மிக்க காவியங்கள் தந்த காளிதாசன், கடைசியில் தென்னிலங்கைக்குப் பயணித்து, அங்கு குமாரதாசா எனும் அரசன் அவையில் புகழ்பெற்று, குறுமதியினரால் கொல்லப் பட்டார் என்று அக்கவிவேந்தனின் கதை இறுதியாக்கப்படுகிறது.

காளிதாசனின் படைப்புகளில் தலையாயது கந்தர்வக் காதலைக் காட்டும் கற்கண்டுக் காவியமான சாகுந்தலம். அதனை தமிழில் சுவைபட கவிதை நாடகமாக தமிழ்ப் பெருமை சேர்த்து தந்துள்ளார் கவிஞர் துருவன் கோ. கோபாலகிருட்டிணன். 44 வருடங்களுக்கு முன் இளமைப் பருவத்தில் அவர் அழகு தமிழ் கவிதை நடையில் எழுதியுள்ள இந்நாடகம், படிப்பவர் மனதில் என்றும் இடம்பெறும்.

தமிழ் இலக்கியங்களில் ஆராக் காதல் கொண்ட என் இளம் வயது முதற் தோழர், அகநானூறு, புறநானூறு, கம்பராமாயணம், நாலாயிரத் திவ்யப்பிரபந்தம், தேவாரம், திருவாசகம், திருப்புகழ் ஆகியவற்றிற்குக் கருநாடக இராகங்களில் ஏற்புடைய தமிழிசையை அழகுற அமைத்துள்ளார். இவரது இசையாற்றலுக்காக இசைச் சாரல் என்ற பட்டத்தை 2011ம் ஆண்டு சேலத்தில் அரசு அலுவலர் மகா நாட்டில் மாவட்ட வருவாய் அலுவலர் (ஓய்வு) திரு. எஸ். விஸ்வநாதன் மற்றும் துணை ஆட்சியர் (ஓய்வு) வி. இருளப்பன் இருவரும் சேர்ந்தளித்தார்கள். இதற்கு மேலும் பெருமைசேர்க்கும் வண்ணம் நம் பெருமதிப்பிற்குரிய உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்கள் 'தெய்வத் தமிழ் இசைச் சாரல்' என உயர்பட்டமளித்துச் சிறப்புச் செய்துள்ளார். தமிழக அரசின் தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறை அரசுச் செயலாளர் முனைவர் மூ. இராசாராம் இ.ஆ.ப. அவர்கள் கவிஞரின் இசையமைப்பில் வெளிவந்துள்ள தேவார–திருவாசக–திவ்வியப் பிரபந்தக் குறுந்தகடுகளைக் கண்டு மகிழ்ந்து அவரைத் தெய்வீக இசையாளர் என்று மனமுவந்து பாராட்டினார். கவிஞரின் நண்பர் குழாம் சார்பில் அப்பெருமக்களுக்கு எங்கள் இதயநன்றியை உரித்தாக்குகின்றோம்.

**பா. அப்துல்ரகிமான் எம்.ஏ.**
அரசு துணைச் செயலாளர் (ஓய்வு)
தமிழக அரசின் தலைமைச் செயலகப் பணி

## நாடக மாந்தர்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | துஷ்யந்தன் | – | நாடகத்தின் நாயகன் |
| 2. | சகுந்தலை | – | நாடகத்தின் நாயகி |
| 3. | கன்வர் | – | சகுந்தலையின் வளர்ப்பு தந்தை |
| 4. | துர்வாசர் | – | கோப முனிவர் |
| 5. | ரதி | – | மன்மதனின் மனையாள் |
| 6. | மன்மதன் | – | காதற் கடவுள் |
| 7. | பைசாசம் | – | கெடுமதியாளன் |
| 8. | பிரியம்வதா | – | சகுந்தலையின் தோழி |
| 9. | அனுசூயை | – | சகுந்தலையின் தோழி |
| 10. | அமைச்சர் | – | துஷ்யந்தனின் அவை முன்னவர் |
| 11. | மீனவர் 1 | – | கங்கைநதிப்புறத்தோர் |
| 12. | மீனவர் 2 | – | கங்கைநதிப்புறத்தோர் |

அரசவைக் காவலர்கள்

மற்றும்

நால்வகை நிலமாந்தர்

## புகுமுன்...

நடந்த வரலாற்றிற்குக் கற்பனை எழிலூட்டி எழுதப்படுவதே காவியம் ஆகும். அக்கற்பனை காவியத்தின் நடந்த உண்மை நிகழ்வுகளைப் புறந்தள்ளாது இருக்க வேண்டும். பேரழகி `கிளியோபாத்திரா'வின் வரலாற்றை வல்லுநர்கள் எழுதிய குறிப்புகளிலிருந்து மாறுபடுத்தி, `ஷேக்ஸ்பியர்' `அந்தோனியும் – கிளியோபாத்திராவும்' என்ற நாடகத்தை காதற் சுவைபட எழுதியிருக்கின்றார். அந்நாடகம் பார்வையாளர்களின் ஆவலைத் தூண்டும் விதத்தில் இருக்கவேண்டி, `இனோபார்பஸ்' என்ற கற்பனைப் பாத்திரத்தை உலவ விட்டிருக்கின்றார். எனவே சரித்திரத்தில் கற்பனை கலந்தால் சுவை கூடும் என்பது தெள்ளத் தெளிவு. என் விருப்பமும் நாடகம் சுவையாக இருக்க வேண்டும் என்பதே.

இந்நாடகம் 1971–ஆம் ஆண்டு உருவாகியது எவ்வாறு தெரியுமா? இன்றும் வியப்பில் விரிகின்றன என் விழிகள். நம் **மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் புரட்சித்தலைவி அம்மா** அவர்கள் 44 ஆண்டுகளுக்கு முன் 'எங்கிருந்தோ வந்தான்' என்ற திரைக்காவியத்தில் நவரசம் மிளிர சகுந்தலைப் பாத்திரத்திற்கு உயிரோட்டம் தந்தார்கள். அவரது குணச்சித்திர நடிப்பு என் நெஞ்சில் நீங்காது நிலைத்ததால் காளிதாசனின் சகுந்தலைக் காவியத்தில் கற்பனை கலந்து அதைக் கவிதை நாடகமாக்கி என் ஊரில் 43 ஆண்டுகளுக்கு முன் அரங்கேற்றினேன். அதன் சிறப்பைத் தமிழுலகம் அறிந்துகொள்ள அகில இந்திய வானொலி நிலையத்தினர் 23.02.1972 அன்று அனைத்து தமிழ் வானொலியிலும் அந்நாடகத்தை ஒலிபரப்பிச் சிறப்பித்தனர்.

இத்தனை நாட்களும் கவனிக்கப்படாதிருந்த இக்கவிதை நாடகத்தை தற்பொழுது புத்தக வடிவில் வெளியிட ஆவன செய்து அணிந்துரை தந்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் இயக்குநர் உயர்திரு முனைவர் கோ. விசயராகவன் அவர்களுக்கு நான் என்றென்றும் நன்றிக்கடன்பட்டிருக்கின்றேன். இந்நூல் வெளிவர ஊக்கம் தந்த தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநர் முனைவர் திரு. கா.மு. சேகர் அவர்களுக்கு என் நன்றியை தெரிவிக்கின்றேன்.

மேலும் என் தமிழ்ப்பணிகளைப் பாராட்டிய தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அரசுச் செயலாளர் முனைவர் மூ. இராசாராம் இ.ஆ.ப. அவர்களுக்கு என் இதய நன்றியை உரித்தாக்குகின்றேன்.

நான் கண்டிராத சகுந்தலையைக் கண்முன் காட்டி, என் கற்பனைத் தேரில் வீற்றிருந்து, 'சாகுந்தலம்' கவிதை நாடகத்தை எழுதிட எண்ணம் தந்து என்னை அன்றே அருள் ஆட்சி செய்த **மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் புரட்சித்தலைவி அம்மா** அவர்களின் பொற்கமலப் பாதங்களுக்கு இக்கவிதை நாடகத்தை கரம் குவித்து, சிரம் தாழ்த்திப் பணிவுடைய பக்தியுடன் அருட்காணிக்கையாக்குகின்றேன்.

சாகுந்தலம் காவியத்திற்காக ஓவியர் இரவிவர்மா அவர்கள் வரைந்த ஓவியங்களை நான் இந்நூலில் எடுத்தாண்டு இருக்கின்றேன். நன்றி.

பணிவுடன்

**'துருவன்' கோ. கோபாலகிருட்டிணன்**
நாடக ஆசிரியர்

## காட்சி – 1

இடம் : வானுலகு

இருப்போர்: ரதி, மன்மதன்

நிலைமை : (சோர்வுற்ற மன்மதனைக் கண்டு ரதி வருந்தி மன்மதனின் மனதை மாற்றுவதற்காக முயற்சித்தல்)

ரதி : மலர்க் கணை மார! மன்மத! மாயவ!
உலர் இதழ் துடிப்ப ஓயுதல் என்னை?
வளர் பிறை நிலவு வாவென அழைக்கும்,
தளிர் நிறை வசந்தம் தாவியே அணைக்கும்,
(மன்மதனைக் கட்டி அணைக்க ரதி முற்படுதல்)
அருகு வா மார! பிரிவுத் துயர் தீர!!

மன்மதன் : ரதியளே விடு விடு; விலகிடு!
ஈதென விலங்கினக் காதல்?
காதற் கிழத்தியே, காலமும் கூடி –
கசந்தது வாழ்க்கை! கசந்தது வசந்தம்!
நாதன் தவத்தை நல்லனுபவத்தை – நான்
நறுமலர்க் கணையால், கலைக்க; விலக்க;
முக்கண் சிவந்தது, முறிந்தது கரும்புவில்,
முடிந்தது வாழ்வென; உடைந்தது மனமும் – முன்பு
தக்கன் தருக்கை அடக்கிய விடக்கண்,
தணலால் எரித்தது! சாம்பராய் மடிந்தேன்!
நினைவில் உள்ளதா? நித்தில வல்லி!

ரதி : நினைவை விட்டு நீங்குமோ அவையும்? – என்
நெஞ்சில் நிறைந்த மன்மதன் மடிந்ததும்,
கூடுதல் விலக்கினக் குலவாக் குருகு – கூடி
ஆடுதல் விடுத்தன மயிலின் மரபு!
நாடுதல் மறந்தன நாரையின் இனங்கள் – துணை
தேடுதல் துறந்தன தேறிடாச் செண்பகம்!

பாடுதல் நீக்கின பாங்கினக் குயில்கள்!
ஊடுதல் உணர்த்தின உலவிடு கவிகள்!

மன்மதன் : வேந்தர் மயங்கினர்! சேந்தர் தயங்கினர்!
சாந்தமும் காந்தமும் பாந்தமாய் அமைந்த,
மாந்தளிர் மேனியர் கண் வில் ஒடிந்திட!
மாந்தர் மறந்தனர் கலவியல் மாண்பு!

ரதி : அழிந்தது உன்னுடல்! அழிந்தது காமம்!
ஒழிந்தது காதல், வீணில் கழிந்தது யாமம்!

மன்மதன் : காமம் மூட்டிடக் கங்கை முடியன்மேல் – மலர்க்
கணை தொடுத்தேன்; கரிந்தேன், பொரிந்தேன்!
சோமன் சினத்தால் காமன் அழிந்தான்,
சோம்பின உயிர்கள்! சோம்பின பயிர்கள்!

ரதி : காமன் இல்லையேல் கலவியும் ஏது? – உனக்கெனச்
சிற்றுடை குலைய; செவ்விதழ் விதர்ப்ப,
குற்றுயிர் நாசியும் செறுமிச் சோர,
முற்றிலா இறைவர் கால்களில் கண்ணீர்
முட்டிட மூழ்கிடக் கதறினேன்; பதறினேன்!

மன்மதன் : நீதியோ? சோதியே? நேர்மையே சோதியாய் – என்று
வாதியாய் எனக்கென, வழக்கும் செய்தனை!

ரதி : விட மிறங்கு நீல கண்டர் – அரவப்
படம் கிறங்கு ஆல கண்டர் – உன்
உடம்பெரித்த செயல் மாற்ற
உலகளந்தானை வேண்டினேன் – அவர்
மனம் இரங்கி, எனக்கு மட்டும்
மதன் உருவைக் காட்டினர்,
மற்றவர்க்குப் பூட்டினர் –

மன்மதன் : (அசதியுடன்) அன்றுமுதல்....
உருவிழந்தேன் என்றாலும்,
உணர் விழக்க வில்லையால் ?

ரதி : (பரபரப்புடன்)
மன்மத! மன்மத! ஏன் இச்சோம்பல் ? உள்ளக் கூம்பல் ?

மன்மதன் : அறியேன் ரதியளே – இது
பருவமுதிர் காலமிதோ ?
பால் அமுதம் திகட்டுவதேன் ?

ரதி : மார! ஈதென்ன மாற்றுரை ? வேற்றுரை ?
தீராக் கலவி திகட்டுமோ ? தீயுமோ ?
இதற்கென் செய்வேன் ?
இதற்கென் செய்வேன் ? (சிந்தித்தல்)
இரு! இரு! புந்தியில்
ஏதோ தட்டுறும்!
ஆ! கண்டேன் விளக்கம்!
காட்டுதும் விளக்கம்!
புறப்படு, புறப்படு! புத்தொளிர்க் காதல்
தெரிந்திடப் புறப்படு, ஐம்மலர்க் கணையொடு!
கொடு, கொடு கை கொடு, – உடன்
காற்றில் விரைந்திடு! காதல் உணர்ந்திடு!
சோரா உளத்தொடு, தொடர்மின்! தொடர்மின்!!
ஆரா அமுதாம், அருங்காதல் காட்டுதும்!!!
உடனே புறப்படு – காதலை
உணர்ந்திட விருப்பொடு!

– திரை –

## காட்சி – 2

இடம் : பாண்டிய நாட்டுப் போர்க்களம்

இருப்போர்: பைசாசம் (தனிமொழி)

நிலைமை : (இல்லறத் துணைவி இல்லாத பாண்டிய நாட்டுப் பைசாசம் காதலர் வாழ்க்கையைக் கெடுக்க எண்ணி வடபுலம் செல்லல்)

பைசாசம் : (தற்புகழ்ச்சியாய்)

எனைப் போல் எவருளர்!
எனைப் போல் எவருளர்!
ஆழியும் நிலனும் ஆதவப் பயனும்,
ஊழியின் கண்ணே, உவப்பத் தோன்ற, – அதுமுதல்
வாழியெம் திறலென, வானவர் நடுங்கி,
வாழ்த்தினர் வகையாய்; வாழ்த்தினர் பணிந்தே!

சூரை என் மூச்சு, சுழிப்புயல் இரைச்சல்!
கோரையாம் புருவம்! கோடே பற்கள்!
நாரையாம் வெண்விழி! நடுங்கிடாக் கருவிழி!
சாரையாம் நாக்கு! சறுக்கு மர மூக்கு!
வாரையாம் கைகள்! வச்சிரத் தோள்கள்!
நாறிடும் தாழியே, நமனுறை வயிறு!
கூறுஇடாப் பனையாம், குதிர்ந்த என் கால்கள்!

பாறை என் உடலம்! கரு முகில் ஆடை!
போர்க்களம் இருப்பிடம்! நார்க்குடல் மெத்தை!
கார் முகில் அன்ன களிறே தலையணை!
போர்வை இருளாம் போர்த்தியே உறங்குவன்,
சீர்பெறு ஆதவன் செவ்வனே எழவும்,
எழுவன், துலக்குவன் பல் எலும்புக் குச்சியால்!
மூழ்குவன்! நீந்துவன்! குருதியின் ஆற்றிடை!

விழுவன் வழுக்கியே, நிணத்துச் சேற்றிடை,
விழுந்திடு உடலக் கரை தனைப் பெயர்த்தே!

(மிகவாய்ச் சிரித்து)

எனைப்போல் எவருளர்!
எனைப்போல் எவருளர்!

(வெளிறிய முகத்துடன்)

இலை! இலை! எந்தன்
வாழ்க்கையும் பொய்யே! – வலிமையும் பொய்யே!
இத்தனை வாய்ப்பு வாய்த்தும் பயனென் ?
அத்துணை இலையே ? அரித்தது கவலை!
'ஏய்!' என அழைத்திட எனக்கென யாருளர் ? – நம்
சேய் எனச் சுட்டிட மகனிலை. மகளிலை

(சோர்வுடன்)

வாழ்ந்தென் பயன் கொல்!
வாழ்ந்தென் பயன் கொல்!

(பெருமூச்சுவிட்டு)

இல்லறம் என்பது இல்லை என்றாயின்,

வாழ்ந்தென் பயன் கொல்!
வாழ்ந்தென் பயன் கொல்!

(சற்றுத் தெளிந்து)

வாகை அணிந்த வழுதியின் போரில்
நா கைப் பேற நன்கு உண்டேன் – இன்று
தோகை மயிலாள் துணை இலை என்று
சோகை பிடிக்க, சோர்தல் சரியில – ம்...
யாது செய்வேன் ? ஏதும் தோன்றில!
(சற்று யோசித்து) ம்.... ம்....
இருகை அசக்கில், யோசனை தோன்றும்!

(இரு கையையும் சேர்த்துக் கசக்குதல்)

ஆ...... இஃ தொரு யோசனை!
காதலர் தம்மை! காலத்தே பிரிப்போம்!
போதலர் வண்டை பூ மறக்கச் செய்வோம்!!
இதனை இத்தமிழ் – நாட்டில் செய்வோமா ?....ம்!

தென்னவர் நாட்டினில் காதலைப் பிரிப்பது
தெய்வத்தாலும் ஆகாத ஒன்று!
செல்வோம் வடபுலம், சின்னாட் பொழுதில்,
செய்வோம் அங்கு நம், செப்பிடு வித்தை!

இடையிடை இரைதனை எடுத்துக் கொள்வோம்!
எங்கும் உள்ளது இடு சுடு காடே!
ஆ..... ஆ..... ஆ.....

(பெரிதாய் நகைத்து – நீங்குதல்)

– திரை –

## காட்சி – 3

இடம் : சோழ நாட்டுச் சிற்றூர்

இருப்போர்: பைசாசம்

நிலைமை : (சோழ நாட்டைக் கடந்து செல்கையில் நாட்டு வளத்தை வியந்து பாராட்டுதல்)

பைசாசம் : என்றும் கண்டேன்! இன்றும் கண்டேன்!
இத்தமிழ் நாட்டில் இயற்கை எழிலை;
குன்றும் கொடுப்பர்! குவி நிதி கொடுப்பர்!
குன்றா மனதினர்! குணத்துத் தமிழர்!

ஆம்பல் மலர்ச்சியை அவர்முகம் காட்டும் – விருந்
தோம்பல் அவர்தம் உயர்வைக் கூட்டும்!
சோம்பல் என்பதே தமிழர்க்கு இல்லை – பகை கண்டு
தேம்புதல் இல்லை! புறம் திரும்புதல் இல்லை!

என்னே அவர்வளம்! எங்கும் தமிழ்க்குலம்,
ஏற்படின் நேர்ப்படும் இயல்பாய் இயற்கை – தமிழர்
கண்களில் கனிவு! தோள்களில் தினவு!
கருத்தினில் தெளிவு! வாழிய தமிழர்!
அரிது அரிது! மானிடராய்ப் பிறத்தல்!
அதனிலும் அரிது தமிழராய் இருத்தல்!
பெரிது பெரிது அவர்தம் பண்பு!
போற்றுவர் காதல்! ஆற்றுவர் விழுப்புண்!

பிறவிகள் ஏழில், பிறந்த ஆறில்;
சிறுமை வறுமை சிறிதும் இல்லெனின்,

தருவான் இறைவன் கடைசிப் பிறப்பை;
தமிழர் நாட்டில் பிறந்திடும் சிறப்பை!
எத்தனை முனிவர் ஒற்றைக் காலில் –
சித்தனை இறைஞ்சுவர் தமிழராய்ப் பிறக்க! – அது விடு
கொக்கும் நீரிடை ஒற்றைக் காலில் –
கொடுந்தவம் புரியும், தமிழராய்ப் பிறக்க!
பாண்டிய நாட்டைத் தாண்டிக் கடந்தோம்!
பார்ப்போம் சோழர்தம் நாட்டின் வளமை!

இதோ உறையூர்! ஆகா! எப்படிச் சொல்வேன்!
சோழர்தம் தலைநகர் வளமிகுப் பொலிவை
மாதோ நடப்பதும்! மங்கலத்தெய்வம் – ஆகா! அவள்
மாசில் அழகில் மங்கும் அணிநகை!
பனுவல் படிக்கும் வளமிகு சிறுவர்!
படைக்கலம் பழுது பார்க்கும் கருமர்!
சினவில் வளைக்கும் செருக்குடை இளைஞர்!
சிலையைப் பழிக்கும் சிற்றிடைப் பாவையர்! – ஏய்.... ஏய்....

பார்த்துச் செல்! பார்த்துச் செல்!
பாதையைக் கூர்ந்து; விருந்து செய்து தமிழர்
வார்த்த கஞ்சி வழியில் வழுக்கும் – நீ
வழுக்கி விழுந்தால் – கழுதை களுக்கெனச் சிரிக்கும்!

சோழர் தம் நாட்டில் குன்றுடைக் குறிஞ்சியும்;
கொடிகள் மரங்களில் குலவிடு முல்லையும்;
சேலுடை வயலுடை மரகத மருதமும்;
சிறுமணல் பரந்த நெய்தலும் உண்டு, காண்!

இரு! இரு! காற்றில் வருகுது கனிந்த நல்லிசை
செவிமடு! செவிமடு! நால்வகைப் பாட்டு –
சேர்ந்தே தேன் என உன் செவியிற் பாயும்!

– திரை –

## காட்சி – 4

(குறிஞ்சிப் பாடல் முல்லைப் பாடல், மருதப் பாடல். நெய்தற் பாடல் முதலிய பாடல்களை அந்தந்த நிலத்தினர் பாடப் பாண்டிய நாட்டுப் பைசாசம் கேட்டு இறும்பூது எய்துதல்)

### குறிஞ்சிப்பாட்டு

(தமிழக மலைவளம் குறித்துக் குறத்தியர் பாடியது )

ஒருத்தி : தில்லாலங்கடி! தில்லாலங்கடி! தில்லாலங்கடி! ஏலோ!
தென்னாட்டு மலைவளத்தைச் சொல்ல வந்தேன்! ஏலோ!

மற்றவள் : தில்லாலங்கடி! தில்லாலங்கடி! தில்லாலங்கடி! ஏலோ!
தொடர் மலைகள் மேகம் தடுத்து, மழை கொடுக்கும் ஏலோ!

ஒருத்தி : கொல்லிமலை, குடகுமலை, கூடல் மலை அம்மே!
குற்றாலத் தென் பொதிகை மேற்கு மலை அம்மே!
வள்ளிமலை, பறம்பு மலை, முதுமலையும் அம்மே !
வன விலங்கும் மனம் கலந்து, வாழும் மலை அம்மே!

மற்றவள் : தில்லாலங்கடி! தில்லாலங்கடி! தில்லாலங்கடி! ஏலோ!
தொடர்மலைகள் மேகம் தடுத்து, மழை கொடுக்கும் ஏலோ!

ஒருத்தி : வெள்ளி மலை, வேங்கடத்து வடமலையும் அம்மே !
வேடுவர்கள் கூடி வாழும் வேங்கை மலை அம்மே !
கொள்ளை அழகு அழகர் மலை, ஆனைமலை அம்மே!
கும்மிருட்டாய் மேகம் படியும், நீல மலை அம்மே!

இருவரும் சேர்ந்து :
தில்லாலங்கடி! தில்லாலங்கடி! தில்லாலங்கடி! ஏலோ!
தென்னாட்டு மலைவளத்தைத் தெரிஞ்சுக்கிட்டோம் ஏலோ!
தென்னாட்டு மழைவளத்தைப் புரிஞ்சுக்கிட்டோம் ஏலோ!

-----

பைசாசம் : கேட்டேன்! கேட்டேன்! அன்றே...
மீட்டும் யாழும் குழலும் சேர்ந்த
குயிலின் குரலில் – மயிலென ஆடும்
குன்றக்குரவை! குரவைக் கூத்து!
குறிஞ்சிமலரைச் சூடி வண்டோச்சும்;
குறவஞ்சியர் பாடும் குறிஞ்சிப்பாட்டு
மலைவளப் பாட்டினை இன்று
கேட்டேன்! கேட்டேன்! (நீட்டி முழங்குதல்)
ம்!!
அடுத்து நாம் கேட்பது முல்லைப்பாட்டு!

## முல்லைப்பாட்டு

(முல்லைத் திறம் வியந்து ஓர் ஆயன் பாடியது)

### எடுப்பு

காற்றில் வருவது வேய்ங்குழல் நாதம் !
கன்னித் தமிழின் இனிய கீதம் ! (காற்றில்)

### தொடுப்பு

புல்லாங்குழலின் நல்லிசை கேட்டு;
புள்ளினம் மயங்கும் பறந்திடத் தயங்கும்!
போதலர் வண்டும் துணைக் குரலெடுக்கும்!
தொடர்ந்தொலி கொடுத்து, நம் செவியை நிறைக்கும்!
(காற்றில்)

### முடிப்பு

கடந்து செல்வோரின் களைப்பை அது தீர்க்கும் !
கானக மாந்தர் அவர்க்கு நல்தினை விருந்தளிக்கும்!
அடையின் தேனும் ஆவின் மடிப்பாலும்
அருவியில் கலந்து தேநீர் – சுவை விருந்தளிக்கும்
(காற்றில்)

-----

பைசாசம் : ஆகா! அழகு! அருமை! அற்புதம்!
காட்டுப்பூக்களின் இதழ்கள் துடிக்க;
கருவண்டு மலர்கிண்டி, தேனுண்டு வழங்கும்.
கந்தர்வ, சிருங்கார, ரீங்கார இசையும்;
கலந்தொன்றி வரும் முல்லைப் –
பாட்டைக் கேட்டேன்! (சிரித்து)

சரி சரி! பின்வரும் மருதநிலப் பாடல் கேட்போம்!

## மருத நிலப் பாடல்

(மருத நிலத்துக் காதலர் இருவர் கலந்து மகிழ்ந்து வயற்புறத்தில் பாடுவது)

ஆடவன் : தொங்கட்டான்! தொங்கட்டான்! – உன்
தொங்கட்டானப் புடிச்சு நான் தொங்கட்டா?
(தொங்கட்டான்)

பெண் : அட! ரெண்டுங்கெட்டான்

பெண் : மூக்குத்தி! என் மூக்குத்தி – உங்க
மூக்கில் குத்தி;
ஆக்கப் பொறுத்த மச்சானே
ஆறப் பொறுக்கலையான்னு
சொல்லிச்சா சொல்லிச்சா!

ஆடவன் : முத்தம்மாளே! உன் முத்து மாலே –
சத்தம் போடாதியன்னு கெலிக்குது –
சொல்லி ஜொலிக்குது. (தொங்கட்டான்)

பெண் : கை நிறைய வளையல் போட்டு
வளச்ச மச்சான் – என்
கை பிடிக்கக் கால நேரம் பாரு மச்சான் !

ஆடவன் : ஒட்டியாணத்துக்குள்ளே –
ஒட்டியாகணும் – உன்னைக்
கட்டியாகணும்! கட்டியாகணும்! (தொங்கட்டான்)

பெண் : மோதரத்தாலே ஒன்னுபட்டோம்! – நாம
ஒன்னுபட்டோம் – இப்ப
மோதரதாலே நின்னுபுட்டோம் – விலகி
நின்னுபுட்டோம்!

ஆடவன் : வேண்டிவந்த சொந்தபந்தம் சூழ்ந்திருக்கணும் – தமிழ்
வேதங்கள் முழங்கத் தங்கத் தாலி கட்டணும் – நான்
தாலி கட்டணும்!

பெண் : ஆமா!
ஊர் அறிய உலகறிய; உன் கையால் என் கழுத்தில்!
தாலிகட்டணும்! தங்கத் தாலிகட்டணும்! (தொங்கட்டான்)

------

பைசாசம் : ஆ! என்ன இது காதல்!
வயலின் வரப்பில் வரம்பின்றி ஆடி
வந்தனர் காதலர்! தந்தனர் பாடல்! –ம்
வாழ்க்கைக்குத் தேவை நகைச்சுவை – இவர்களோ
வகை வகை நகைகள் அணிவதைச் சுவைப்பட –
பாடினர்! ஆடினர்! இருப்பினும் சரியல!
பாட்டும் கூத்தும் எனக்குப் பாகற்காய்!
பழகப்பழகப் பாலும் புளிக்கும் –
பழகிக் காதலில் களிப்பதும் கரிக்கும்!
(காதலை வெறுத்துப் பேசியபின்)
ஏதோ தொலைவில்....
இனிதாய்க் கேட்கும்! ..ஆ! அது
நெய்தற் பாட்டு!
செவி மடு! செவி மடு!

## நெய்தற் பாட்டு

(கடலில் களைப்புத் தீரப் பரதவர் பாடும் பாடல்)

ஒருவர் : கடலை நம்பிப் பொழப்பிருக்குது ஏலேலோ! – நம்ம
கவலை கடலை விடப் பெரிசு ஏலேலோ!

மற்றவர் : ஆமா ஏலேலோ! ஆமா ஏலேலோ!

ஒருவர் : காலமெல்லாம் கடலிலே வாழுறோம்! வலை வீசுறோம்!
காத்து மழை வீசுனா கவலைப்பட்டுக் கலங்குறோம்!
கரைக்கு வந்து கடலு மீனைப் பங்கு போட்டுவிக்கிறோம்!
காலத்திலே விக்கல்லேன்னா கருவாடாக் காயுறோம்!

மற்றவர் : கடலை நம்பி பொழப்பிருக்குது ஏலேலோ! – நம்ம
கவலை கடலை விடப் பெரிசு ஏலேலோ!

மற்றவர் : கட்டு மரம் தன்னிலே கட்டுச் சாதம் இருக்குது.
கட்டுன பொஞ்சாதி ரொம்ப அவசரமா செஞ்சது.
கலயத்திலே இருக்குறதை வாயில் போட்டுப்பார்த்துட்டேன்!
கல்லு உப்புப் போடல! கடலில் உப்புக்குப் பஞ்சமில்லே

மற்றவர் : ஆமா ஏலேலோ! ஆமா ஏலேலோ!

ஒருவர் : கடலை நம்பி பொழப்பிருக்குது ஏலேலோ! – நம்ம
கவலை கடலை விடப் பெரிசு ஏலேலோ!

மற்றவர் : ஆமா ஏலேலோ! ஆமா ஏலேலோ!
ஆ!ஆ!ஆ!ஆ!ஆ! ஆ!ஆ!ஆ!ஆ!ஆ!

(மெல்லப் பாட்டின் ஒலி குறைதல்)

------

பைசாசம் : ஆகா! ஆழ்கடல் மீனவர் தொடரிசை எழுப்பி,
அலையின் அரவம் அடங்க முழங்கும்
அற்புதப் பெருங்குரல்! அதில் கலந்தது கவலை
ம்! அவர்தம் பாட்டில் – ஆதங்கம்!
ஆ! தங்கும் என் மனத்தில்

(நால்வகைப் பாடல்கள் கேட்டுப் பைசாசம் கிறங்குதல்)

– திரை –

# காட்சி – 5

இடம் : கானக நெடுவழி

இருப்போர்: துஷ்யந்தன்

நிலைமை : (முன்னொரு நாள் கங்கை நதிவள அத்தினாபுரத்து அரசன் துஷ்யந்தன் ஓய்வெடுக்க வனத்திற்கு வருகிறான். அங்கு அமைதியைக் கெடுக்கும் படையினரைத் தலைநகருக்குத் திருப்பி அனுப்பிவிட்டு, தனியனாய்க் காட்டு வழியில் நடந்து செல்கின்றான்)

துஷ்யந்தன்: ஆகா! அற்புதம்! அதிசயம்!
கானகம் – வானகக்
கந்தர்வர் வந்து
கண்டு மகிழ்ந்து,
களைப்பாறி நின்று,
வேனிற் காலத்தில்
விடாய்தனை ஆற்றி,
விலகிச் செல்லவும்
விரும்பாதிருப்பார்! – ஆம்!

எங்குப் பார்த்தாலும் பசுமை படர்ந்து
எழிலால் அடர்ந்த அடவிப் பிரதேசம்!
செங்கதிரோனும் ஊடுருவி உட்புக;
சிறிதும் இயலாத சித்திரக் கூடம்!

கங்கையள் வற்றாத
வேகவதியாக –
கான்ஆறுகள் பலவும்
சென்றோடிச் சேரும்!

எங்கெங்கு நோக்கினும்
இன்ப மயமான
எழுதாத ஓவிய
இயற்கைக் காட்சிகள்!

தீராத தலைவலி
தேசாந்திரப் பிரச்சினை;
திரளாக மொய்க்கின்ற
மெய்க் காவலர்கள்,

தேராத வழக்குகள்,
செவிப்பறை கிழிக்கும்
தேர்ந்தெடுத்த பொய்ப்
புகழுரைகள் புளிக்கும்!

மாறாத நடைமுறையால்
மரத்துப் போனேன்!
மனம் – வேண்டும் தனிமை
மாற்றமும் வேண்டும்!

ஆறாத கவலை —
ரண சிந்தனைகள்!
ஆற்றுப் படுத்த –
இயலாத சுற்றம்!
– எனவே

நோதல் நோய் நீங்கக்
கானகம் வந்தேன்! – இங்கும்
நெருக்கும் கூட்டம் – என்
நிம்மதி கெடுக்கும்!

ஆதலால் காதலால்
உடன் வந்தோரை;
அன்பாகத் திருப்பியே
அனுப்பினன் தலைநகர்!

அச்சம் என்பது
எனக்கென்றும் இல்லை!
ஆபத்து வரும் என்ற
கவலையும் இல்லை!

கச்சையைக் கட்டியே
களைத்துப் போனேன்!
கையில் அம்புடன்
இருப்பதை வெறுத்தேன்!
நிச்சயம் விலங்குகள்
என்னைத் தாக்காமல்;
எச்சரிக்கும் ஒலியைப்
பறவைகள் எழுப்பும்!

இச்சையுடனே நான் – எத்
திக்கும் திரிவேன்!
இதுவரை கிட்டாத
இன்ப சுகம் பெறுவேன்!
ஆகா!

பார்க்கும் இடமெலாம்;
வண்ண மலர்த் தோட்டம்!
பறவைகள் மான்கூட்டம்
மிகஅன்பு காட்டும்!

ஈர்க்கும் கனியுண்டு!
காயுண்டு நீருண்டு!
எல்லாம் இங்குண்டு!
இல்லாத தொன்றில்லை!

வேதனைச் சங்கடம்!
அங்குண்டு இங்கில்லை!
வேண்டும் தனிமைக்கு
இனிமையும் சேர்க்க;

மாதென ஒருதுணை!
மாண்பமை எனக்கு;
மனதிற்குப் பொருத்தமாய் —
கிடைக்கவும் வேண்டும்!

தேடுவோம்! தேடுவோம்!
திக்கெட்டும் தேடுவோம்!
தேவையை அறிந்த — நல்
பாவை நல்லாளை;

நாடிடக் கூடும் — நான்
நல் நிமித்தங்கள்;
நாட்டில் காணாது — இக்
காட்டினில் கண்டேன்!

செல்வோம் தேடி — அச்
செல்வம் தேடி! (செல்லல்)

— திரை —

## காட்சி – 6

இடம் : கானகச் சோலை

இருப்போர்: சகுந்தலை, துஷ்யந்தன்

நிலைமை : (தவமுனி கன்வரின் வளர்ப்பு மகள் சகுந்தலையும் காட்டிற்கு வந்த மன்னன் துஷ்யந்தனும் ரதியின் எண்ணப்படி கானகத்தில் சந்தித்துக் காதல் வயப்படுகின்றனர்)

சகுந்தலை: (தனிமொழி)

விந்தியந் தென்றல் வீசிடும் மாருதம்!
வீங்கிள வேனில் எங்கும் சுகந்தம்!
ஆ. அதோ!
நறுமலர் மணத்தை முகர்ந்திடும் வண்டு;
தரு நிழல் மறைவில் ஒதுங்கும் சாரைகள்!
முதுகை நீவியும் முன்கை பிடித்தும்;
முருகிதழ் கவ்வும் கவியும் மந்தியும் – அது கண்டு
அலகொடு அலகைத் தேய்த்துக் கொள்ளும்
அன்றில் காதலர் – தம் – செய்கை வெட்கும்
கலவியல் கற்றிட கருங்குயில் முயலும்!
காட்டு முயலும் பேடையொடு துயிலும் – ம்!

(பெருமூச்சு விட்டு)

மடமும் நாணமும் அச்சமும் பயிர்ப்பும்;
மறைத்தன எனக்கு – இம் மகிழ்வுறு காட்சிகள்!
குடத்துள் விளக்காய்க் குன்றிடும் அழகு;
கொள்வார் இன்றிக் குவி நிதி கிடந்தது;
தந்தையின் கட்டளை தவத்தில் விடுத்தது;
தளிர் துளிர் ஆசையும் விதையுள் உறைந்தது;

மந்தையின் ஆடாய் மயங்கிக் கிடந்தேன்!
மாமுனி தந்தை நீங்கிடத் தெளிந்தேன்!
(சிறிது தூரம் விலகி நடத்தல்)

துஷ்யந்தன்: (நடந்து வந்து கொண்டே)
யாரிவள் மாதினள்? ஊர்வசிக்கு உறவோ?
வார்குழல் இரம்பை வனப்பைப் பெற்றனள்!
மேனகை மரபோ? திலோத்தமைச் சுற்றமோ?
கானகக் கன்னியோ? காந்தருவ மகளோ?
யாரிவள்? யாரிவள்?
(அப்பொழுது அவள் பெயர் சொல்லி, தோழி அழைத்தல்)

பிரியம் வதா: சகுந்தலை! சகுந்தலை!
(தோழி)

துஷ்யந்தன்: ஆகா!
சகுந்தலை! சகுந்தலை!
பெண்ணும் அழகு; பெயரும் அழகு, என் –
உள்ளம் பதிந்து உடைத்தது உளத்தை!
கண்களே! கண்களே! ஈதென் நோக்கம்?
கள்ளம் தவிர்த்து என்னிடம் திரும்புமின்!

அனுசூயா: சகுந்தலை! சகுந்தலை!
(தோழி) எங்கே தொலைந்தனை?

சகுந்தலை: ஏனடி தோழி; வாவியின் கரையில்;
எருதுகள் ஆகி அசையா நின்றீர்!
புறப்படு; புறப்படு; விழுந்திடும் கதிரவன்!
(திரும்பும் போது துஷ்யந்தனைப் பார்த்து)
ஆ. யாரிவர் புதியவர்.... ம்
எங்ஙனம் நோக்குவன்?

பிரியம் வதா: யாரடி அங்கே மாரன் மகனோ?

அனுசூயா : கூறடிக் கள்ளி! குலவிய தென்னை ?

பிரியம் வதா: என்னடி கேட்கிறோம்; ஏதும் பதிலிலை ? – அவர் மேல்;
ஏற்றிய பார்வை மாற்றிடு; சாற்றிடு!
சகுந்தலை: ஏதும் அறியேன் எவரோ வானவர்!

துஷ்யந்தன்: (புன்னகையுடன்)
ஆ. வானவரில்லை! கங்கை வளமிகு நாட்டின்;
தேனமர் தெரியல் வேந்தன் துஷ்யந்தன்!

அனுசூயா : கானகம் வந்தது வேட்டையும் ஆடவோ ?

பிரியம்வதா: வேட்டை கனிந்ததோ ? வேட்கை தணிந்ததோ ?
(– தோழியர் சிரித்திடல்)

சகுந்தலை: போதும் நிறுத்தடி பொல்லாச் சிரிப்பை;
யாதும் தீதாய் உரைப்பது அழகல!

அனுசூயா : அடியே! சகுந்தலை, அந்தியும் வந்திடில்;
ஆசையும் நெருக்கும் அன்பும் பெருகும்!
அழகுச் சிலையே உன்ஆவலை விடுத்து,
அருகில் வா, பிரியம்வதா – செல்வோம் வா. வா!
(சகுந்தலை துஷ்யந்தனைப் பிரிவதால் வருந்துதல்)

பிரியம்வதா: வாடி என்றதும் வாடினள் பார். பார்!

அனுசூயா : ஓடி வருபவள் ஓய்ந்து வருதல் பார்!

சகுந்தலை: (துஷ்யந்தனை நினைந்து)
திருமுக முறுவல்; திகட்டா விழிகள்;
திரும்பிப் பார்க்கத் தூண்டும் நெஞ்சம்!
மறுமுறை காண மார்க்கம் எப்படி ?
ஆ. மாசில் காலில் பொய் முள் தைக்கும்!
ஆ.... ஆ... (வலிக் குரலிடல்)

துஷ்யந்தன்: ஏன் என் மனம் இப்படித் துணுக்குறும் ?
என்ன தான் நடந்தது ? ஏதும் அறிகிலேன் !
அருகே செல்வோம்!
ஆறுதல் சொல்வோம் !
(அருகில் சென்று சகுந்தலையிடம்)
யாதோ தீது ?

சகுந்தலை: ஒன்றும் இல்லை ! சிறுமுள் காலில் !

துஷ்யந்தன்: சிறுமுள் காலிலா ? பெருமுள் நெஞ்சில் !

பிரியம்வதா: வேலும் சேலும் விழியில் அமைந்த;
சகுந்தலைப் பெண்ணே!
கன்வரின் கண்ணே!
காலும் கடுக்கும் கடிதே வாடி !

சகுந்தலை: (பிரிவை வேண்டாது)
இளகிய உள்ளம் எனக்கெனத் துடிக்கும்;
இதயம் அவரிடம், ஏற்றது என் மனம்;
இம் மன்னனே என் மணாளன் !
இமைக்கும் நொடியில் எந்தன் நெஞ்சில்—
பரவசம் தந்து பதிந்தது அவர் உரு !
ம் – எப்படிப் பிரிவேன் !

துஷ்யந்தன்: (ஏக்கத்துடன்) ம்.... ஆகா ! இப் – பேரழகுப் பெண் !
தன்னுயிர் வைத்து; என்னுயிர் தன்னை—
தன்னிடம் கொண்ட தகைமை மறக்கேன் !
நாட்டைத் துறக்கலாம்; வேட்டை மறக்கலாம்;
நாயகி தன்னை – நான் அடைந்தக் கால் !
பாக்கியம்; பாக்கியம்; என்றது வாய்க்கும் – பின்
பற்றுவம்; பற்றுவம்; அப் பாவைச் சிற்றடி.
(செல்லல்)

– திரை –

## காட்சி – 7

இடம் : வடதமிழ் நாட்டுச் சிற்றூர்

இருப்போர்: பைசாசம் தனிமொழி

நிலைமை : தமிழ் நாட்டின் சிறப்பை வியப்பது

பைசாசம் : அற்புதம் அற்புதம்! அருமை அருமை!
அடடா என்னே தமிழின் இனிமை!
அடடா என்னே தமிழின் இளமை!

ஒன்றாய் இருப்பது தமிழர் பண்பாடு!
இரண்டாய் ஆனது அவர்தம் சாதி!
மூன்றாம் நிலைப்பது ஆட்சியால் நாடு!
நான்காய்ப் பிரிவது நிலக்கோட்பாடு!
ஐந்தாம் நிலமோ அங்கே இல்லை!
ஆறாய் ஆனது வற்றா ஆறு!
ஏழாய் எழுந்தது தமிழிசை வெள்ளம்!
எட்டாய் எட்டியது அது திசைகள் எங்கும்!

உண்மை... உண்மை...

மகுடியில் மயங்காப் படம் விரி பாம்பும்,
மாலவன் வேய்ங்குழல் மயக்காப் பசுவும்,
தமிழின் இன்னிசைப் பாட்டைக் கேட்டால்!
தானே மயங்கும்! ஏன்... நானே மயங்கினேன்!
ஆ... மயங்கினேன்... மயக்கம்! மயக்கம்!
கூடாது... கூடாது!

தெளிமின் தெளிமின்!
தேறுமின் தேறுமின்!
என்னதான் ஆவது இயற்றிய கொள்கை?
என்னதான் ஆவது இயம்பிய சூளுரை? –
எந்தன் கொள்கையும் இயல்பாய் மாறும் –
இன்தமிழ் நாட்டில் நான் இருந்தக்கால் – என்
நஞ்சின் நினைவை நற்றமிழ் மாற்றும்;
நடுங்கும் நெஞ்சு – ஒடுங்கும் கொள்கை!
நீங்குக தமிழகம்! நீக்குக தமிழினம்!
வாங்குக உறுதி! வடபுலம் விரைதி!

– திரை –

# காட்சி – 8

இடம் : கன்வர் குடில்

இருப்போர் : சகுந்தலை, துஷ்யந்தன், ரதி, மன்மதன்

நிலை : (துஷ்யந்தன் மீது கொண்ட காதல் நினைவில் சகுந்தலை – சந்திப்பு)

சகுந்தலை : வானின் கருமுகில் வாடிய நிலத்தை
வளமுறச் செய்யப் பலமாய்ப் பொழிந்தது!
மண்ணொடு கலந்த மழையின் நீரும்,
மணத்தைக் கொடுத்து மனதைத் தொட்டது!
ஏனோ இன்றென் இடக் கண் துடிப்பது?
ஏதும் நோயோ? ஏதும் அறியேன்?

துஷ்யந்தன் : (சிரித்துக்கொண்டே அருகில் வந்து)
ஆம், ஆம் நோய் தான்! அறிந்தேன் –
உந்தன் மேனிப் பசலையால்!

சகுந்தலை: ஆ. தாங்களா?

துஷ்யந்தன் : ஆம் சகுந்தலை! நீ காதலை அறிந்திலை!

சகுந்தலை : எப்படி அறிந்தீர் தாங்கள் மட்டும்?

துஷ்யந்தன் : மருத்துவன் அறிவான் மற்றவர் நோயை!

சகுந்தலை : ம்... காதல் நோயை ஏதால் அறியலாம்?

துஷ்யந்தன்: நோய் நொடி வரவை நாடியில் – தேடியே
தேர்ந்தவர் அறிவர்; சகத்தின் கண்ணே!

காதல் தன்னில்; இடக்கண் துடிக்கில்–
காண்பர் காதலர்; வரவை – கண்ணே!!

சகுந்தலை: ஓகோ; உளதோ; முன் அனுபவம் அங்கே ?

துஷ்யந்தன்: இல்லை; இல்லை; ஈதென்ன தொல்லை ?

சகுந்தலை: எப்படி அறிந்தீர்; எந்தன் காதலை ?

துஷ்யந்தன்: நேற்று மாலை, நோற்ற நல்தவத்தால்;
நேர்ந்தது பலனும்; நின்றது மானும்!
போற்றும் அழகுடை அப்பொன்னிற மானுக்கு
பொருந்திய உள்ளத்தால் – காலில் பொய் முள் தைத்திட;
அம் மான் என்னை விரும்பித் திரும்பிப் பார்த்தது – அதை
ஏனைய மான்கள் இழுத்துச் சென்றன! – என்
கண்ணில் நின்ற கலைமான் தன்னை;
காலைப் பொழுதில் தேடிக் கண்டேன்!

சகுந்தலை: எங்கே ?

துஷ்யந்தன்: இங்கே!
(மான் மான் மான் நீ தேடி அலைந்த மான்)

பாடல்

சகுந்தலை : மான் மான் மான்!
நீ தேடி அலைந்த மான் – நான் (மான்)

துஷ்யந்தன் : தேன் தேன் தேன்!
உன்னைத் தேடி நானலைந்தேன் – இன்பத் (தேன்)

சகுந்தலை: காதலெனும் கணை யெடுத்து;
கண்க ளெனும் வில்லில் வைத்து–
வேதனையில் நான் மெலிய...
விட்டதென்ன நாணேற்றி – (மான்)

துஷ்யந்தன்: நாணேற்றி விட்ட தனால்;
நாணம் பற்றி விட்டதென்று...
தேனூறும் இதழ் துடித்த—
செய லென்ன கயல் விழியே ? (தேன்)

சகுந்தலை: கயல் விழியை நான் திருப்ப;
காலெடுத்து முள்ளெடுத்தேன்;
செய விழக்கும் என் விழியை – உன்
செவ் விழியும் கவ்விய தேன் ? (மான்)

துஷ்யந்தன்: செவ் விழியும் கவ்வியதால்;
செவ்வரியும் படர்ந்த தென்று—
கை மறைக்கும் காட்சி என்னை !
மெய் மறக்கச் செய்த தென்ன ? (தேன்)

------

(காட்சியில் இரதி – மன்மதன் வருகை)

ரதி : மன்மத, உற்று நோக்குதி; காதல் பெருந்தீ !
.... பற்றும் காட்சி; காதலர் மனத்தை !

மன்மதன் : (விரக்தியுடன்)
ரதியளே, கொழுந்து விட்டே
எரிவது எல்லாம்; கரிந்து சரிந்து,
அவிந்து அழிந்து; ஆறிப்போகும் !

ரதி : (மறுப்புடன்)
விடு; விடு; உனது மொழியெலாம் வேம்பே !
இதயம் இரண்டும் ஒன்றாய் இணையும்—
இன்பம் கிளர்ந்த காட்சியைக் கண்டும்,
உதயம் இலையோ ? உன் உளத்தே காதல் !

உன் உன்மத்தம் தெளிந்திடச் சிலநாள் ஆகும்!
(வியந்து) – ஆகா!
கண்ணொடு கண் கவ்வும் காட்சி பார்!
காதல் பாடம் கற்றனர் இருவரும்;
காணா இன்பம் கண்டனர் இருவரும்!

(மன்மதனைக் கைப்பற்றி இழுத்து)

சரி! சரி! காதலர் தனிமையைக் கெடுப்பதும்
சரியல – காதலர் இன்று;
ஏகாந்தத்தில் காந்தமொடு இரும்பாய்;
ஈருடல் ஒன்றி இரண்டறக் கலந்தனர்!
ஆகா! ஆகா! அற்புதக் காட்சி – இது
ஆனந்தக் காதலுக்கு; அரும்பெரும் சாட்சி!

மன்மதன் : (வெறுப்புடன்) அதைவிடு! இன்று
எங்கே தங்குவோம்?
எழில் மிகு ரதியளே!

ரதி : சுரும்புடை கரும்பின் வில்லோய்!
சுந்தர அனங்க நல்லோய்!
நீ பழையவன் என்றால் இக்காதலர் மனத்தில்;
பாருள மட்டும் தங்கலாம்! இன்றோ! பாபம் வா.. வா!
(ரதி, மன்மதனை அழைத்துச் செல்லல்)
(பிரியம்வதா சகுந்தலையை அழைத்தல்)

பிரியம்வதா: சகுந்தலை, சகுந்தலை!

சகுந்தலை: அய்யோ! தோழியர் அருகே வருவர்!

துஷ்யந்தன்: (விரைந்து)

அப்படியானால் இன்று சென்று;
நாளை நான் மீள்குவன்!

சகுந்தலை: எங்கே தங்குவீர் ? என்னுயிர் நாயக!

துஷ்யந்தன்: நேற்று இராப்பொழுது தங்கிய குகையில்!

சகுந்தலை: குகையிலா மன்னவ ?
வகையில் இருப்பிடம்!
வேண்டும் என்றால் எங்கள் ஆசிரமத்தில்...

துஷ்யந்தன்: ஆ.. சிரமம்! சிரமம்... உனக்கெனில்
கூற்றுவன் வீட்டிலும் குடிபுகுவேன் நான்!
வருவேன் நாளை! வாட்டம் தவிர்த்திடு
(துஷ்யந்தன் செல்லல்)

– திரை –

## காட்சி – 9

இடம் : கானகச் சோலை

இருப்போர்: பைசாசம் (தனிமொழி) இரதி, மன்மதன்

நிலைமை : (தேடிய காதலர்களைக் கண்டதால் அவர்களைப் பிரிக்க எண்ணம் கொண்டு பைசாசம் பேசுதல்)

பைசாசம் : கண்டேன் காதலை! கண்டேன் காதலை!
தேடிய காதலர்; இத்தினத்தில் கிடைத்தனர்!
திளைத்தனன் மகிழ்வில்! திளைத்தனன் மகிழ்வில்!!
சிந்தை குளிர்ந்தது! சிந்தை குளிர்ந்தது!! – நாம்
செப்பிடு வித்தையைச் செய்யும் காலமும், –
விந்தைச் செயல்கள் விதைக்கும் நேரமும்;
விரைவில் வந்திடும்! விரைவில் வந்திடும்!!
புதுமலர் சகுந்தலைப் பொலிவினை நுகர்வான்,
மதுமலர் மாலை அணிந்த துஷ்யந்தன்!
இன்பம் நுகர்ந்திடு இளைய காதலர்,
ஒருவரை யொருவர் பார்வையால் பருகுவர்!
அழகும் ஆண்மையும் பழகிய காட்சியை;
அருகில் கண்டு பிறந்தது சினத்தீ!
பிணையொடு கலைமான் இணைவது கண்டு,
பிணக்கொடு எந்தன்; புத்தியும் திரியும்!
மாவடு கடிப்ப – போல் பற்கள் நெறியும்!
மனவடு துடித்து; பெரிதாய் விரியும்!
(பார்வையை வேறு திசையில் மாற்றி)
என்னே! பெருமிதம்; இம் முல்லைக்கொடிக்கு,
இளைய மரத்துக் கொழுநன் உடலில்
தன்னையும் சகுந்தலை என்றே நினைத்து,
தாவிப் படர்ந்தது; தலையை அசைத்தது!
முல்லைக் கொடியே! முல்லைக் கொடியே!

மூழ்கித் திளைக்காய்! மகிழ்வுக் கடலில்
இல்லை என்றாக்குவன்; நீ படர்ந்த இளமரம் – உன்
இளமை அழிய; கொழுநனைப் பிரிப்பேன்... ம்... ம்...
(சற்று யோசித்து நகைத்து)
சகுந்தலை தனக்கும் இதுபோல் செய்குவன்!
(ரதி மன்மதன் வருவதைப் பார்த்து)
ஆ... யார் இங்கு வருவது ?
கரும்பு வில்லை அணைந்து வருபவள் – ரதியோ ?
ஓகோ! மாரன் இன்னும் உருப் பெறவில்லையோ ?
ஏனோ! இவ்விடம் ஏகினர் ? இருவரும்..
புரிந்தது எதற்கென! புரிந்தது எதற்கென!!
சகுந்தலைக் காதல் சகலமும் காண,
தகுந்த இடத்தைத் தேர்ந்து போகுவர் – எனவே
நமது வித்தையை இப்பொழுது அவிழ்க்கில்,
நமத்துப் போகும்; நாடுவம் காலம்!
ரதியும் மதனும் இங்குதான் இருப்பர்!
சதிகள் தம்மை;
சற்று விழிப்புடன் செய்வோம் – ம்...

(ஆணவத்துடன் விலகிச் செல்லல்)

– திரை –

# காட்சி – 10

இடம் : கானகச் சோலை

இருப்போர்: சகுந்தலை, துஷ்யந்தன், ரதி, மன்மதன்

நிலைமை : (துஷ்யந்தன் வரவை எதிர்பார்த்து, சகுந்தலை வாடி இருத்தல்)

சகுந்தலை: தென்றல் வந்திட அசையா நிற்கும்;
தென்னங் கீற்றே! செப்பிடு; காதலர்–
மன்றல் குறித்து மகிழ்வுரை ஆற்றிட,
மாலைப் பொழுதில்; இங்கு வாராரோ ?

ஏங்குதென் நெஞ்சம்; எடுப்புடை நாசியும் – உள்
வாங்கிடு தென்றலை அனலாய் வழங்கிடும் – பிரிவைத்
தாங்குமோ உள்ளம், தயங்குதென் அறிவு –
தேங்கிடாக் கண்ணீர் திரையிடும் கண்களில்!
தென்னை மரமே! உந்தன் பரிவை – என்
தேற்றிட முடியா மனதும் ஏற்கும்!
என்னை நினைந்து கண்ணீர் சொரிய – தலையில்;
ஏற்றனை இளங்குலைச் செவ்விள இளநீர்!

(அங்குவந்து சகுந்தலையின் கண்களைத் துஷ்யந்தன் தன் கைகளால் மூடல்)

ஆ! யார் என் கண்ணின் காட்சியை மறைத்தது ?
வாரிப் படிந்த கார் முகில் கூந்தல், பிரியம்வதை ?
– அல்லது
வடிவுடைய அழகியள் அனுசூயை ?

துஷ்யந்தன்: இல்லை அவர்கள் யாரும் இங்கிலை – என்
வில்லைப் பழித்த புருவமும் விழியும்,
மறைத்தது நான் தான்! மருட்சியும் வேண்டா!
உரையைத் தொடர்ந்திடு! உள்ளம் திறந்திடு!

சகுந்தலை: (வெட்கத்தில்)
பார்த்த பிறகு வார்த்தை குறைந்தது!
பாவை என் கலக்கம் பனிநீர் இலைமேல்
வார்த்திடு முத்தாய் இருந்து மறைந்தது,
வழிபடும் ஆதவன் தோன்றிய காலை!

துஷ்யந்தன்: அருமை உவமை; ஆடகப் பாவையே – அருங்
காதலுக்கு இப்படி உவமை தேவையே .... ஆ
யார் உன்னை அணைத்தது ? வார் குழல் கலைத்தது ?
கூறிடு அவனை – கூற்றுவன் ஆகுவம்!

சகுந்தலை: (சிரித்து) தென்றல் என்றால்; தோன்றுமோ பகைமை?

துஷ்யந்தன்: உண்மைக் காதலன் தனக்கென உரியவளை;
தென்றலும் தீண்டிட இம்மியும் இடங்கொடான்!
(கட்டியணைக்க முயற்சித்தல்)

சகுந்தலை: போதும் குறும்பு, இனிது போக்குவம் பொழுது!

துஷ்யந்தன்: அமுதப் பாவையே! குமுதமாம் விழிகளில்,
ஆற்றல் மிகுந்த காந்தம் தன்னை,
எங்ஙனம் பொருத்தினை! என் இரும்பு மனத்தினை
எப்படி ஈர்க்குதும்; உன் கண் காந்தம்!

சகுந்தலை: இல்லை! இல்லை! என் கண் காந்தம் இல்லை;
ஏகாந்த நிலையே இணைக்கும் காந்தம்!

துஷ்யந்தன்: ம்! காந்தம் தான் உன் விழியில் – என்
கருத்து உன் காதல் மொழியில்!

சகுந்தலை: கண்ணும் கருத்தும் ஒத்துப் போயின் ?

துஷ்யந்தன்: கடிமணம் வேண்டும் கருத்து அது தானே!

சகுந்தலை: எப்படிக் கண்டீர் – என் உளக்கிடக்கையை ?
துஷ்யந்தன்: கைப்புண் காண – கண்ணாடி தேவையா ?

சகுந்தலை: என் தந்தை நம் மணத்திற்குத் தடையாய் இருப்பின் ?

துஷ்யந்தன்: சிந்தை ஒன்றிடக் காந்தர்வ மணத்தை – இன்றே
சிறப்பாய் நடத்துவம், தொடுத்திடு மாலை!

சகுந்தலை: இதனால் பின்னர், தீது ஏதும் நேரிடின் ?

துஷ்யந்தன்: என்னை நம்பிடின் எடுத்திடு மாலை!
என்னுயிர் மறந்து எனக்கென்ன வேலை ?

(சகுந்தலை காட்டு மலர்களைக் கொண்டு அவசர அவசரமாக இருமாலைகளைத் தொடுத்தல்)

(தெய்வ மலர்மாலை ஒன்று கொண்டு)

**பாடல்**

துஷ்யந்தன்: தெய்வ மலர் மாலை ஒன்று கொண்டு
தேடி வந்த பெண்ணும் இங்கு உண்டு! (தெய்வ)

சகுந்தலை: மானை இங்குத் தேடி வந்த மன்ன
மங்கை தன்னை நாடி வந்த தென்ன ? (மானை)

துஷ்யந்தன்: பேசா மொழியில் பிறந்தது காதல்!
பெண்ணின் மனதும் புரிந்தது காதல் (பேசா)
ஆசை அவள் விழியில் அச்சம் மொழியில்;
என்றாகிய தோ ? (தெய்வ)

சகுந்தலை: இன்று போல் என்றும் நாம்; இணைத்திருப்போமே!
இயற்கையின் சாட்சியில் மணம் புரிந்தோமே! (இன்று)
மன்றல் தந்த மன்ன! என் கண்ண!
தென்றல் வீசிடுதே! (மானை)

துஷ்யந்தன்: கண்ணில் காந்தம் கொண்டனள் பாவை!
காதலுக்கு ஏகாந்தம் என்றும் தேவை!
அன்னம் தந்த நடையில்; வெண்ணுடையில்;
மனமே மயங்கும்! (தெய்வ)

சகுந்தலை: உந்தன் நெஞ்சம் எந்தன் மஞ்சம்!
உறவு கொண்டாட உள்ளம் அஞ்சும்;
காதல் மணவாள; குணசீல!
இன்ப நேரமிதே! (மானை)

(இருவரும் மகிழ்ந்து குலாவுதல்)

– திரை –

## காட்சி –11

இடம் : கானகம்

இருப்போர்: இரதி, மன்மதன்

நிலைமை : (சகுந்தலை துஷ்யந்தன் காதலை ரதி வியப்பது – மன்மதன் வெறுப்பது)

ரதி : (வியப்புடன்)

மன்மத – ஆடவன் என்றால் அழகன் இவன் தான்!
அமைந்தது பொருத்தம், அழகியள் தனக்கு!
தேடவும் வேண்டுமோ ? திசைகள் நான்கிலும்–
தேறிய காதலர் இவ்விருவரைத் தவிர!

மன்மதன் : பொறுத்திடு ரதியளே! நிறுத்திடு புகழுரை – இது
காதல் உளத்துக் கடிமணம் தானோ – அல்லது
காம வேட்கைக் கந்தர்வ மணமோ! – ஆ...
காமம் மிகுந்த காதல் ஆயின்;
தானே கருகும், அன்பின் பயிரும்!

ரதி : (கோபத்துடன்)

போதும் உந்தன் பொல்லாங்கு உரைகள்!
யாதும் தீதாய்ப் பகர்வது பண்பல – மன்மத!

இருமனம் நெருங்கிய திருமணம் இங்குக் காண்!
– கானகத்

தருக்கள் வாழ்த்தும் நறுமலர் பொழிந்து;
இடியும் முழவென முழங்கும்; இன்னிசை–
படிக்கும் குயில்கள் நடிக்கும் மயில்கள்;
பொடிப் பொடி துளியாய்; – மழையும் – இங்கு
நெடி மிகு பன்னீர் போலத் தூவும் – வண்டு

தேனையும் மகரந்தத் தூளையும் – நன்கு
சேர்த்துச் சந்தனம் போலக் குழைக்கும்!
விண்ணையும் மண்ணையும் சாட்சியாய் வைத்து,
வதுவை புரிந்தனர்! நன்கு
வாழிய மணமகன்! வாழிய மணமகள்!

மன்மதன் : வாழிய மணமகன்! வாழிய மணமகள்! – ஆகா!
(இகழ்வாய்ச் சிரித்து) ரதியளே!
நீயே இன்று தனித் தனியாக – அவர்கள்
நீங்கி வாழப் பிரித்து வாழ்த்தினை!
இன்று இணைந்தவர் பின்னொரு நாளில்
இன்னல்பட்டுப் பிரிகுவர் போலும்!

ரதி : போதும் மன்மத!
பொல்லாங்கு உரைப்பது பிடிக்கும் உனக்கு–
இவ்வழி செல்லுவர் காதலர் – அதனால்;
சிலை எடு! வழிவிடு!

– திரை –

## காட்சி –12

இடம் : கானகம் – கன்வர் குடில்

இருப்போர் : பிரியம்வதா, அனுசூயை

நிலைமை : (காதல் வயப்பட்ட சகுந்தலையின் செயல் கண்டு தோழியர் வியப்பது)

அனுசூயை : என்னடி பிரியம்வதா? எங்கே நம் சகுந்தலை!

பிரியம்வதா : ம்! அடுப்பங்கரை முதல்
அருவிக்கரை வரை;
அலசிப் பார்த்தேன்.
அவள் அகப்படவில்லை!

அனுசூயை : (சிரித்து)
அழகியள் வனத்தில்
அயராது நடக்கும்!
ஆடவன் அழகனை;
ஆர்வமாய்த் தேடும்!

பிரியம்வதா : என்னவோ விந்தை?
இளமகள் சகுந்தலை!
கொழுகொம்பு தேடும்–
கொடியள் ஆனாள்!

அனுசூயை : கொழுநன் ஆவான்;
கோ மகன் என்று,
குதித்தோடும் இளமான்!
குதிர்ந்தது கனவான்!

பிரியம்வதா : (பூரிப்புடன்)
வஞ்சிக் கொடிக்கு
வாய்த்தது இளமரம்!

கொஞ்சிக் குலாவிடக்
கொண்டனள் ஆசை!

அனுசூயை : இருவரும் அரவக்
காதல் புரிகுவர்!
எழில்மிகு காட்டில்
சுற்றித் திரிவர்!

பிரியம்வதா : சரி! சரி! குரல்கொடு!
சற்றே விளித்துச்
சகுந்தலைத் தேடு!
சாயும் காலம்! – நீயும்
சடுதியில் அழைத்திடு!
சகுந்தலை! சகுந்தலை!

(இருவரும் தேடிச் செல்லல்)

– திரை –

## காட்சி –13

இடம் : கன்வர் தவக் குழல்

இருப்போர்: சகுந்தலை, துஷ்யந்தன்

நிலைமை : (துஷ்யந்தனைக் காணாது சகுந்தலை வருந்துதல்)

சகுந்தலை: ஏனோ இன்றென் வலக்கண் துடிப்பது ?
ஏதும் நோயோ ஏதும் அறியேன் ?
ஏனோ என்னவர் வருகையைக் காணேம் – ம்
யாரிடம் உரைப்பேன் என்மனக் குறையை?
ஆ. அதோ அன்னப்பேடை !
பேடையே, ஆடவர் கூடலும் பிரிதலும்;
பேதை நீ அறிவையோ ? கூறிடு என்னிடம்!
வாடையைத் தாங்கிட இயலுமோ ? – தனிமை;
வாழ்வு இனி இனிக்குமோ ? வரித்தவர் வருவரோ ?
காலிலே பொய்முள், தைத்திடத் திரும்பியே
காதலர் பொலிவினைக் கண்ணால் கண்டேன் !
நாலிலே சனியிருக்க; நாயகன் எனை மறக்க,
நலிவிலே நான் வாட, நன்கறிக பேடைநீ!

துஷ்யந்தன்: (சிரித்துக் கொண்டே வந்து)
பேடைக்கு உரைத்திட்டுப் போமோ நின் துயர் !
பேற்றினை இங்குவிட்டுப் போமோ என் உயிர் !

சகுந்தலை: கண்கள் நீர்கொள;
கவலையும் ஆட்கொள;
கன்னியை விழிக்கவிட்டு –
தொலைதூரம் சென்றதென்னை ?

துஷ்யந்தன்: அழகு மானொன்று....

சகுந்தலை: ஓகோ.... எனைவிட அம்மான் அழகோ.... ?

துஷ்யந்தன்: விடுத்தேன் அழகினை; வெறுமான் ஒன்று–
வேடன் வலையில் சிக்கியபோது – அதை
எடுத்தேன் வலையை விடுத்து – மேலும்
எடுத்தேன் ஒரு முடிவு இருக்கட்டும் இம்மான்,
எழில்மிகு கானிடை – என்றெண்ணி நீங்கினேன்!

சகுந்தலை: (வருந்தி – பெருமூச்சுடன்)
ம்.... நீங்குதல் ஆடவர்க்கும்;
ஏங்குதல் பெண்டிர்க்கும்;
நெடுநாள் முன்பிருந்து
நிலைத்திட்ட பண்பு போலும்!

துஷ்யந்தன்: வாட்டம் ஏன் சகுந்தலை ? –
வழுவும் நின் கைவளை ?

சகுந்தலை: நான் மட்டோ ?
காடையின் பேடை; கருத்தழி பிடிகள்;
கவி நீங்கு மந்தி; கலை நீங்கு பிணைகள்!
ஓடையின் கயல்கள்; ஓலமிடு போத்து;
ஒருத்தியின் நிலைகண்டு வாடின! – பின் சாடின!

துஷ்யந்தன்: (மெல்லிய நகைப்புடன்)
உனைக் கண்டு வாடின!
எனைக் கண்டு ஓடின!

சகுந்தலை: (பெரு மூச்சுடன்)
ஆம்....

ஆற்றலின் அரசரும்; ஆர்த்திடு கடலும்;
ஆசையோடு நெருங்கிடின்; அஞ்சுவர் மாந்தர்!
வேற்றிடம் நாடும்; வெண் திரள் அலையும்,
வேட்கை தணிந்தால்; விரைந்தே திரும்பும்!

துஷ்யந்தன்: இல்லை என் வேட்கை தணியவில்லை!
விரும்புவன் நான் – நீ தரும் – நீரும்!
(துஷ்யந்தன் நீர் கேட்க – அதைக் கொணரச் சகுந்தலை
குடிலுக்குள் செல்லல் – அப்பொழுது பைசாசம் வருதல்)

பைசாசம் : ஆ... அதோ தனிமையில் துஷ்யந்தன் – நான்
தேடிய காலம் – இத் தினத்தில் கிடைத்தது –
தேர்ந்த காதலை – என் திறத்தால் கெடுப்பேன் – இனி
வாடிய பயிராய்; வளமகள் கருகும் – வந்த
வான்முகில் காதலன் நீங்கும் பொழுதில்!
சரி! சரி! உடனே –
மன்னவன் தன்னை மாயையால் மறைப்போம்!
ஊகும்.... கூடாது, கூடாது!
மணாளனைக் காணாது ஏங்கி –
மங்கையும்; தன்னுயிர்...
மாய்த்துக் கொள்ளும் – ஊகும்!
பெண்டிர் பாவம், பெரிதாம் சாபம்!
ஆ... இஃதொரு யோசனை – இப்படிச் செய்வோம்!
காவலன் பிரிந்த கடிநகர் தன்னையும் –
கலங்கிய மக்கள் கதறும் காட்சியும் –
மன்னன் வரும் என –
ஆவல் மிகுந்து ஏங்கிய மகளிரும்;
ஆவைப் பிரிந்த கன்றாம் வீரரும்;
மன்னவன் மனத்தே காட்சியாய்க் காட்டி – அவன்
எண்ணம் மாற்றி – நாடு
ஏகவும் வைப்போம் – சகுந்தலையை –

ஏங்கவும் வைப்போம் (இகழ்வுச் சிரிப்பு)!
(பைசாசம் மன்னன் மனதைக் கலைத்தல்)
(துஷ்யந்தன் மனக்கலக்கம் அடைதல்)

துஷ்யந்தன்: ஆ... என்ன இது! ஏதோதோ நினைவுகள்?
அரசு, ஆட்சி, இருக்கை, ஈதல், உற்றார், ஊரார்;
எழில் மனை, ஏவலர், ஐம்பேராயம்,
ஒன்பது குழுவினர், ஓவிய விதானம், ஔடதப் பண்டிதர்!
ஆ..... மக்களை மறந்தேன்! மாநகர் துறந்தேன்!
நினைவின் அலைகள் நீந்தும் மனதில் – ஆ... அதோ!
நீரொடு சகுந்தலை – நம் நினைவைச் சொல்வோம்!
(சகுந்தலை நீர்க் குவளையுடன் வருதல்)

துஷ்யந்தன்: ஆ... மறந்தேன் சகுந்தலை!

சகுந்தலை: எனையா! எழில்மிகு வனத்தையா? அல்லது
என்னொடு புரிந்த திருமணத்தையா?

துஷ்யந்தன்: இலை இலை! சகுந்தலை, தலைநகர் நீங்கி;
இருந்தது நாள்பல; பொருந்துமோ மன்னர்க்கு?
கலைவளர் நாட்டின்; காவலன் செய்கை –
கசந்திடும் மாந்தர்க்கு; இசைந்து நீ விடைகொடு!

சகுந்தலை: விடைகொடு! விடை கொடு! – ஆ! எப்படிப்பட்ட
இடிமொழி! புயல் நடை!! சூறையின் சொற்றொடர்!!!
இவை கேட்டும் இறந்திடா; தவஉயிர் என்னுயிர்;
அவ உயிர்! என் உயிர்!

துஷ்யந்தன்: என்னுடலில் இலங்கிடு –
உயிரே! கலங்கிடாய்!
கடிநகர் சென்றதும் கடமையால் அழைத்து;

நலங்கிடச் செய்தும்; நறுமலர் பொழிந்தும்;
நானுனை மறப்பேன்! இல்லை! இல்லை!
நானுனை மணப்பேன்! நவில்வது பொய்யில!

சகுந்தலை: உறவாட வந்தவர், உறவு – வாடப் பிரிவரோ ?

துஷ்யந்தன்: பிரிவதும் போவதும் காதலின் நிமித்தமே!

சகுந்தலை: பிரிந்ததும் மறப்பது காதலர் பழக்கமே!

துஷ்யந்தன்: கண்ணில் பாவையே! காலத்தை மறக்கினும்;
கடமையை மறக்கினும்; காட்சியை மறக்கினும்;
பெண்ணின் பெரும் பேற்றை; பேரெழிலை மறக்கவோ ?
பேதை! நீ ஐயுற்றால் பெற்றிடுக! கணையாழி!
(கணையாழி கொடுக்கும்பொழுது – அது நழுவி விழுதல்.
அதைச் சகுந்தலை கையால் எடுத்துப் பார்த்து)

சகுந்தலை: எதற்கு இந்தக் கணையாழி ஏங்கவோ இதைப் பார்த்து ?

துஷ்யந்தன்: என் கையுள் சின்னாள் இருந்தவளை மறக்கினும்!
என் கையின் பன்னாட் கணையாழி மறக்கிலேன்!!
(துஷ்யந்தன் துயருடன் நீங்கிட முனைதல்)

சகுந்தலை: (கண்ணீர் மல்க)
காவலர் பரிசினை, காதலர் பரிசினை,
காலமும் மறப்பனோ! கணையாழி துறப்பனோ!

துஷ்யந்தன்: செல்கிறேன் சகுந்தலை! செல்கிறேன் உயிர் பிரிந்து!
செல்கிறேன் சகுந்தலை! செல்கிறேன் உனை மறந்து!!

– திரை –

# காட்சி – 14

இடம் : கானகப் பொழில்

இருப்போர்: ரதி, மன்மதன்

நிலைமை : (பைசாசம் செய்த சதியால் துஷ்யந்தன் பிரிந்து சென்றதைப் பார்த்துக் கொண்டிருந்த மன்மதன் அதை ரதியிடம் தெரிவிக்கின்றான்)

மன்மதன் : ரதி ரதி ஓடிவா! அதி சீக்கிரமே!

ரதி : மன்மத! என்ன நடந்தது! ஏன் இப் பதற்றம் ?

மன்மதன் : மின்னற் கொடியாள் சகுந்தலை தனக்கு ?

ரதி : சகுந்தலை தனக்கா ? சொல்! சொல்! சீக்கிரம்!!

மன்மதன் : எப்படிச் சொல்வேன்! எப்படிச் சொல்வேன்!
செப்படி வித்தை திறம்பட நடந்தது!
செம்மைக் காதல் சிதறிட உடைந்தது!

ரதி : மன்மத.... பூர்வ பீடிகை – என் ஆர்வம் குறைக்கும்!

மன்மதன் : ரதியளே..
சூழ்ச்சியின் பின்னலில் துஷ்யந்தன் சிக்கினான்!
சுடர்க்கொடி சகுந்தலை துயரம் உற்றனள்!

ரதி : என்னதான் நடந்தது! என்னுளம் பதைக்குது!

மன்மதன் : மன்னவன் பிரிந்தான், சகுந்தலை தவிக்க;
தென்னவன் என்றிடின் இப்படிப் பிரிவனோ ?

ரதி : என்ன! பிரிந்தானா துஷ்யந்தன் ?
பாழ்! பாழ்! எந்தன் திட்டமும் பாழ் பாழ்!
நம்மை ஒத்த இருவரை இணைத்து;
உம்மை மாற்ற உறுதியும் கொண்டேன்!
கன்வ மகரிஷி தவத்தால் பெற்ற;
கானக இயற்கைக்கு எழிலைச் சேர்க்கும் –
பெண்ணை என்செயல் சிறந்திடத் தேர்ந்தேன்!

பேதை மனதும் காதல் வயப்பட,
மன்னன் துஷ்யந்தன் தன் மாநகர் நீங்கி – படையொடு
மான் வேட்டை ஆடிடக் கானகம் வந்தனன் – அவனைத்
தனிவழி பிரித்துத் தவக்குடில் பக்கம்;
தகைவாய் வந்திடத் தகுந்தவை செய்தேன் –
சொல்லவும் வேண்டுமோ ? மன்மதக் கலைக்கு !

வில்லினைப் பிடித்தவன் அதனை விடுத்து;
வேல்விழி மாதின் கையைப் பற்றினான் – காதலின்
வேள்வியை வளர்த்து விரக தாபத்தால்;
விருந்து படைத்தனர் ஒருவருக்கு ஒருவர்.

மன்மதன் : விருந்தா அது வேட்டையல்லவா ?
வேட்டை அம்பினை விடுத்து விரைவாய்; துஷ்யந்தன் –
வேட்கை நல் அன்பினைக் கொண்டனன் நிறைவொடு!

சகுந்தலை: யாரின் கண்ணோ பட்டது; கெட்டது,
சீருடைச் சிறப்புடை ஜீவியக் காதல்! – இப்படி
நேரிடும் என்று முன்பே தெரியின் –
நீங்கிடு வேனோ ? – ஆம் நீஎன் செய்தனை ?

மன்மதன் : சோர்ந்து அயர்ந்து கொஞ்சம் பொழுது–
தூங்கிப் போயினன் சூழ்நிலை மறந்து!

ரதி : (அரற்றும் குரலில்)
சகுந்தலை! என்னை மன்னிடுத்திடுக!

தகுந்த கணவனை உனக்குத் தந்து;
மிகுந்த மகிழ்வுடன் வாழவும் வைத்து;
மதனின் மனத்தே!
புகுந்த சலிப்பைப் போக்கிட நினைத்தேன் –
ஆனால் சகுந்தலை!
கெட்டேன் நானும்! கெட்டாய் நீயும்!!

மன்மதன் : ரதி ரதி! இதுவும் விதி என்றிருப்பின் – அவள்
கதியை நினைந்து கலங்குதல் முறையல!

ரதி : விதியிலை; விதியிலை; வீணர் தம் சதியிது.
விதிப்பவன் மதியினை; யானும் அறியும்,
புதிய வாழ்வினை பொலிவுடன் தொடங்கிய,
பொற்கொடி மனம் – பொங்கிட விதியான்!
– பிரம்மன், தர்மன்!
யாரோ கயவன் தேரா மனத்தொடு – சகுந்தலை
சீராய் வாழ்ந்த சிறப்பினைக் கெடுத்தனன்!
தேடுவேன் அவனை; தேடுவேன் அவனை, – பிடித்துச்
சாடுவேன்; கேடுடைச் சதி புரிந்தவனை – மன்மத!
சகுந்தலை தனக்கு துணையாய் இங்கிரு! – அவளைச்
சார்ந்திடு! துயரை நீக்கிடச் செயல்படு!

– திரை –

## காட்சி – 15

இடம் : கானகம்

இருப்போர்: பைசாசம், ரதி

நிலைமை : (காதலரைப் பிரித்த மகிழ்வில் பைசாசம் ஆர்ப்பரித்தல்)

பைசாசம் : எனைப்போல் எவருளர்! எனைப்போல் எவருளர்!
எடுத்த காரியம் விரைவாய் முடிக்கும்,
இயல்பும் திறனும் ஒருங்கே அமைந்த
எனைபோல் எவருளர்; எனைப்போல் எவருளர் ?
கெடுப்ப தென்பது எளிதோ ? அதிலும் – அன்பு
கெழுமிய காதலைக் கெடுப்பதும் எளிதோ ?
துடிப்பாள் சகுந்தலை, வடிப்பாள் கண்ணீர் – அவள்
துன்புறும் காட்சியை – நான் கண்டே இன்புறும் – ஆ...!
எளிதில் பிரிவேனோ இவளை – துஷ்யந்தன் ? – நான்
ஏற்றிய நஞ்சு – அவன் நெஞ்சில் நிலைத்தது – நீரில்
பாசிக்கு இல்லை நிலைத்திடு வேரும் – ஆதலின்
படர் இடம் தன்னை எளிதில் மாற்றும் – ஆடவர்
நேசிப்பதுவும் இப்படி – ஆகும் – இனிது
பேசிக் காரியம் முடிந்த பின் ஏகும்!
(இகழ்வுடன் சிரித்து)

வீசிய தென்றல் விலகிப் போகின் – அங்கு
விரையும் வெம்மைக் கோடைக் காற்று – பேசிய
காதல் மொழியும் கரைந்து போயின் – மனம்
நோதல் என்றும் நோன்பாய் ஆகும்!
பாவம் சகுந்தலை! – இவை ஏதும் அறிந்திலை!
என்மனக் குறையின் எடையும் குறைந்தது!
மன்னவன் இவளை மறந்து சென்றனன்!
(பெரிதாய்ச் சிரித்தல்)

(காட்சியில் இரதி வருதல்)

இரதி : ஆ.... யாரிது பூதம்!
இரு கைகொட்டி; இகழ்வாய் நகைத்து – பிறர்க்கு
இன்னல் விளைத்த இன்பம் காட்டி;
நரகத் தேவன் நமனுரு கொண்டு – ஏதோ
நவிலும் தனியே – ஆ! இது... நாசப் பேயே!
ஏந்திழை தனக்கு நேர்ந்திடு துன்பம் –
இயற்றியது இவனோ? இழிவுடை யவனோ?
எதற்கும் கேட்போம் – இந்த ஈனப் பிறப்பை!
(பைசாசத்தை நோக்கி)
நீயோ பேயே! மன்னனின் காதலை –
போவாய் என்று – உளம் புகுந்து துரத்தினை?

பைசாசம் : ஆம்.. ரதியளே நான் தான்...
அழித்தேன் அன்பினை,
(வஞ்சகச் சிரிப்புடன்)
கடமை தவறிய காவலன் மனத்தில்;
கடிநகர் நடக்கும் காட்சியைக் காட்டினேன்!
மட மயில் சகுந்தலை; பிரிவுத்துயர் உணர –
பொருந்திய காதலைப் பிரித்துக் காட்டினேன்!

(பெருமைச் சிரிப்பு)

இரதி : ஐய்யோ... பாவப் பிசாசே! பழிதனைச் செய்தனை! – நீ
ஏவிய சலனம், எழுப்பின புயலும்,
பைங் கொடி தழுவும்; கொழுகொம்பு ஒடித்தனை!
பாரில் காதல்; பயிரை மாய்த்தனை! – உனக்கு
என்ன தீங்கு சகுந்தலை செய்தனள் – நீ
உண்ணும் உணவில் மண்ணை இட்டளோ?

பைசாசம் : (இறுமாப்புடன்)
இல்லறத் துணைவி இல்லா என் முன்;
சல்லாபம் செய்தது சாலவும் குற்றம்...

இரதி : குற்றம்! குற்றம்; குலாவுதல் குற்றம்,
அப்படித் தானோ அகந்தைப் பிசாசே!

பைசாசம் : ஆம்! ஆம்!

இரதி : இழிபிறப்பே! எந்த நாடு உந்தன் நாடு!

பைசாசம் : இன்தமிழ் பேசும் பாண்டி நாடு!

இரதி : என்ன பாண்டி நாட்டுப் பைசாசமா நீ.... சே!
பைந்தமிழ் அறிந்தவன்; காதலைப் பிரிக்கும் –
பாவச் செயலைக் கனவிலும் செய்யான்!
(சினந்து)
ஆம்! தமிழை அறிந்தவன்; தடுத்திட மாட்டான்!
தழைத்திடு காதலை; துளிர்த்திடு காதலை!
காதல் என்னும் பயிரை வளர்க்கும்;
சீதத் தண்ணீர் சீர்மிகு செந்தமிழ் –
செந்தமிழ் நாட்டினன் செய்யான் இச்செயல்!
நற்றமிழ் இயல்பை நீ நலியச் செய்தனை –
நலமிகு மரபைத் தலை குனியச் செய்தனை ?
(இரதி உரை கேட்டுப் பைசாசம் திருந்துதல்)

பைசாசம் : ஐய்யோ! ஐய்யோ!
தவறிழைத்துவிட்டேன்!
தமிழ் தனக்கு இல்லா மாசினை;
எந்தன் வினையால் ஏற்படுத்தினனே!
தென்னவர் பெருமை என்னால் அழிந்தது!
தெய்வக்காதலும் என்னால் தீய்ந்தது!
காதல் தேன்கூட்டைக் கலைத்த கயவன் நான்!
தேனை உண்டிட அலைந்த முடவன் – ஓரிடம்
வானை அண்ணாந்து பார்த்து –
கான் தேன் கூட்டினைப் பற்ற இயலாததால்,
மனம் சலித்துக் கைப் பற்றிய கோலால் –
தீர்த்தனன் வஞ்சம், தேன்கூட்டினை அழித்து!

அதுபோல் –
என்னுளத் தெழுந்த இழிவுடைச் சினத்தீ!
எரித்தது காதல் சந்தனக் காட்டை!
எப்படி அவிப்பேன்! எப்படி அவிப்பேன் – பிரிவெனும்
எரிதழல் வாட்டும் சகுந்தலைத் தவிப்பை!
செப்படி வித்தை செருக்கால் யானும்;
செய்த வினையை, காதலுக்கு அணையை,
எப்படி உடைப்பேன்? எப்படி உடைப்பேன்?
(அழுது அரற்றல்)

இரதி : (பெருமையுடன்)
தமிழை அறிந்தவன் தவறுகள் செய்திடின் –
தன்னிலை உணர்ந்து வருந்துவன் திருந்துவன் –
காதல்
அமிழ்தினில் கலக்கிய நஞ்சினை விலக்கிட;
ஆற்றலின் பூதமே – புறப்படு! புறப்படு! – உடனே
மாற்று நல்மருந்தை மங்கைக்களிப்போம்!
மன்னவன் திரும்பிட நாம் மனமும் களிப்போம்!!

– திரை –

## காட்சி – 16

இடம் : கானகத் தனிக்குடில்

இருப்போர்: சகுந்தலை, துர்வாசர்

நிலைமை : (காதலன் பிரிவால் சகுந்தலை துயரில் செய்வது அறியாது வாடுதல். அங்கு வந்த துர்வாச முனிவரை அவள் கவனிக்காததால் அவர் வெகுண்டு சாபமிடல்)

சகுந்தலை: (தனிமொழி)

தென்றலே! நீ வீசிடு திசையை மறந்தனை –
தேம்பிடு உளத்தின் வசையை விரும்பினை!
நன்றிலை இதுவும் இன்றே திரும்பிடு;
நாயகன் மனதை என்பால் திருப்பிடு!
மருதம் உதிர்ந்து முல்லை பூத்தது – இம்
முல்லை உதிர்ந்து அம் மருதம் பூக்குமோ ?
தோழியர் விடுத்திடும் கேள்விக் கணைகள்;
தாழிடமுடியா என் உளத்தைத் தகர்க்கும் – அவர்
சென்ற திக்கினை வெறித்து நோக்கி,
குன்றும் பார்வை! குமுறும் உள்ளம்!
வருவார் தலைவர் சின்னாட் பொழுதில்;
வற்றிய ஆற்றிடை; ஆடியின் பெருக்கென!
தருவோம் அவர்க்கு இனிப்புச் செய்தி – எனத்
தாங்கினேன் சுமையை; அவர் தந்த பரிசை – மன்னவன்
சிலரும் அறியாது திருமணம் செய்தனன்!
பலரும் அறியாப் பழியும் வளர்ந்தது.
என்செய்வேன் எப்படி மறப்பேன்!
காதல் பரிசை எப்படி மறைப்பேன்!
இதயச் சுமையொடு இன்னொரு சுமையும்,
வயிற்றில் வளர்ந்தது.... ம்

வளரும் குழந்தை வடிவினைக் காண –
தளரும் உயிரைத் தாங்கி இருப்பனோ – ஆ
(திடீரெனச் சூறைக்காற்று அங்கு வீசுதல்)
வீசும் புழுதிச் சூறைக் காற்று!
வீட்டினுள் செல்வோம்!
(குடிலுக்குள் விரைந்து செல்லுதல்)

துர்வாசர் : (வந்து கொண்டே)
ஓம் நமச்சிவாய! ஓம் நமச்சிவாய!
யாகம் முடிந்தது ஏகுவம் எமது ஊர்!
போகும் இடமோ; மிகத் தொலைவு உளது;
தாகம் கண்டு தவிக்குது நாவும் –
போக்குவம் தாகம்! சகுந்தலை கையால்!
(ஆர்வ வியப்புடன்)
சகுந்தலை .... சகுந்தலை... அடடா!
கன்வர் செய்த புண்ணியம் அல்லவோ?
கண்கவர் சகுந்தலை மகளாய்க் கிடைத்தனள்!
புன்னகை அவள் நகை! போக்கிடும் களைப்பை!
புத்தெழில் பாவை! கானகப் புதுமலர்!

தூசுடைப் பாசிகள் நீரில் மிதக்கினும் – அவை
தூய தாமரை அழகை ஒக்குமோ?
பேசும் விழிகள் பெற்ற அப்பெண்ணின்
தேசுடை அழகை – தோழிகள் பெறுமோ?

மாதுடைச் சிவன் சடை ஏறிய மதியின்;
மாசும் மருவும் – அதன் அழகைக் கூட்டும்!
போதுடை மலர்கள் பூத்திடும் கானகப்
பொலிவில் குறைகளும் – இவள் அழகைக் கூட்டும்!

என்னே! அவளிடம் அமைந்த பண்பு!
என்னைக் காணின், எழுந்து பணிவுடன் – காலில்
விழுந்து எழுந்து, விழுந்து விழுந்து,
விருந்தும் இடுவாள் நான் வியப்புற விரைந்தே...

(சற்று யோசனை செய்து)
ஏன்... என்னைக் கண்டு இல் உள் சென்றனள் ?
ஏனக்கென உடனே –
இனிய விருந்துக்கு முனைந்தனள் போலும்!
இருப்பினும் அழைப்போம்!இனியவள் தன்னை!

சகுந்தலை சகுந்தலை ஓ...! வரவேற்கும்
பொறுப்பில் முனைந்தனள் போலும் பெண்மயில்!
பொறுத்து அழைப்போம்; சிரித்து வருவள்!

சகுந்தலை ? சகுந்தலை ?
ஏதும் விளையாட்டோ என்னிடம் கொண்டனள் ?
எப்படியாயினும் இப்பொழுது அழைப்போம்!
சகுந்தலை! சகுந்தலை! – என்குரல் – உன்செவி
புகுந்திலை ? சகுந்தலை – ம்...

ஏதும் நோயோ என் கண் மணிக்கு ?
இப்படி வந்து சாளரம் நோக்குவோம்!
(ஜன்னலில் எட்டிப் பார்த்து முன் வந்து)
இருக்கின்றாளோ, என்ன வாட்டம்... ?
எதன்மேல் நாட்டம் ? – எதற்கும்
இன்னொரு தடவை அழைத்துப் பார்ப்போம்!
சகுந்தலை, சகுந்தலை!

(சற்றுக் கோபத்துடன்)
எதனை நினைந்து என்குரல் மறந்தனள் ?
ஆ... தெளிந்தேன்! தெளிந்தேன் – அவள்
சிந்தனை எதுவென, ஓ
அது கங்கை நாடன் துஷ்யந்தனிடமோ ? சகுந்தலை....
என்னை மறந்து மன்னனை நினைந்தனை!
நீ – அவனை –
என்றும் நினைக்க –
அவன் உன்னை மறக்க –
இடுவேன் சாபம்! கெடுவாய் அதனால்!

சகுந்தலை – என்
தாகம் தீர்க்க நீரைத் தருவாய்;
தகைவாய்; நகை – வாயிடை அரும்ப;
என நான் நினைந்தேன்; என் நினைவும் பொய்த்திட
மோகந் தன்னில் மூழ்கினை அல்லவோ ?
மோசம் போகுக !நாசம் ஆகுக !
(பெருங்குரல் எடுத்து)
துஷ்யந்தா !
இவளின் அழகும்; நீ இயற்றிய காதலும் – செம்
பவள இதழும்; கைபற்றிய நிகழ்ச்சியும்;
மறந்திடு ! மறந்திடு ! மன்னவ !மறந்திடு !
இதோ சாபம் – இங்கிருப்பதும் பாபம் !
(கமண்டலத்தில் நீரில்லாததால் நெற்றி நீர் வழித்து–
சகுந்தலைக்குச் சாபமிட்டு நீங்குதல்

– திரை –

# காட்சி – 17

இடம் : கானகம்

இருப்போர்: ரதி, மன்மதன், பைசாசம்

நிலைமை : (பைசாசத்துடன் ரதியும் மன்மதனும் சகுந்தலை குறித்து உரையாடல் – பைசாசம் வருந்துதல்)

மன்மதன் : ரதி, ரதி எங்கே சென்றனை ? எல்லாம் அழிந்தது!
நங்கை சகுந்தலை நாசம் ஆயினள்!

பைசாசம் : எப்படி முடியும்! நான் ஏதும் செய்திலன்!

மன்மதன் : யாரிது ?

இரதி : பாண்டிய நாட்டுப் பைசாசம்!

மன்மதன் : ஓகோ! சகுந்லை தனக்குத் தீவினை எல்லாம்!

இரதி : ஆம்.... ஆம்.... அதுவிடு! திருந்தினன் தமிழால் – என்
சகுந்தலைக்கு எதுவும் கேடோ கெடுதியோ ?

மன்மதன் : எப்படிச் சொல்வேன் இப்படி அடுக்காய்;
ஏந்திழை தனக்கு நேர்ந்திடு துன்பம் – இவர்
செப்படி வித்தையைச் செய்யாப் பொழுதிலும் – வந்து
சேர்ந்தது இன்னல்! சினந்தனன் முனிவன்!

இரதி : யார் மாமுனி கன்வரா ?

மன்மதன் : இல்லை!
எவ்விதக் குற்றம் சகுந்தலை செய்யினும்;
என்றும் அளிக்கான் இப்படிச் சாபம்!

இரதி : பின்
சாபம் கொடுத்த கோப முனி யார் ?

மன்மதன் : துர்வாசர்!

பைசாசம் : துர்வாசரா ?
மூக்கின் நுனியில் தேக்குவர் கோபம்!

மன்மதன் : மன்னன் நினைவில் மாதும் மூழ்கினள்;
மாமுனி களைப்பில் வந்தது அறிந்திலள்,
பலமுறை அவளைப் பலமாய் அழைத்தும்–
பார்வை தன்னை – தன் பக்கம் திருப்பிடா;
சந்தன மேனியள் சகுந்தலை தனக்கு – தன்
தவத்தால் சாபம் தந்தனன் முனிவன்!

பைசாசம் : ஆமாம்! சிந்தும் நீரொடு;
வெந்தணல் மூச்சொடு – முனிவன்
தந்திடும் சாபம் சாலவும் தீதாம்!

இரதி : என்ன அச் சாபம் இயம்புக மன்மத ?

மன்மதன் : முற்றும் சொல்லவோ – முற்றும் துறந்த –
முனிவன் முழங்கிய சீற்ற உரைகள் – துஷ்யந்தா!
இவளின் அழகும்; நீ இயற்றிய காதலும் – செம்
பவள இதழும்; கை பற்றிய நிகழ்ச்சியும்
மறந்திடு! மறந்திடு! மன்னவ மறந்திடு! – என்று
மிகு சின முனிவன் வெகுண்டு உரைத்து – பின்
நீரிலாக் கமண்டலம் நிலத்தினில் வீசி – தன்
நெற்றி நீர் வழித்துச் சாபமும் தந்தனன்!

இரதி : மன்மத!
சாபம் – தடுத்திடத் தவறினை!
கெடுத்தனை எல்லாம்!

மன்மதன் : நான் என் செய்வேன் – முனிவனின் கோபம்
ஆற்றிட நினைக்கின்! முற்றிலும் அழிப்பான்!

பைசாசம் : என்னால் உற்றது இத்தனை இன்னல்!
ஏற்றேன் பழியினை! எப்படிப் போக்குவேன்?

இரதி : கலங்காய் பூதமே! உந்தன் செயலில்
கலந்தது விதியும் குலைந்தது வாழ்வும்; –
பின்வரும் மகளிர் சகுந்தலை தன்னை
எண்ணிப் பார்த்து – இழக்கார் மனதை!

பைசாசம் : சகுந்தலை தனக்கு இது தகுந்த முடிவோ?

மன்மதன் : விதியின் செயலை வெல்வார் யாரோ?
விலகிப் போமோ? விளையும் துன்பம்!
நதி நீர் ஆடினும் நற்றவம் நாடினும்
நடப்பது நடக்கும்; நாமும் நடப்போம்!

பைசாசம் : ஐய்யோ! என் செயலொடு காலச் சதியும் கலந்து,
இழைத்தது மாபெரும் இன்னல் – முடிவில்
துன்பமும் துயரும் உற்றனள் சகுந்தலை!
துடைப்பதெப்படி அவள் துயரொடு என்வினை?

இரதி : ம்... அவள் துயரைக் காலம் கரைக்கும்!
உன் வினை நீங்கிட உபாயம் சொல்வேன்!
காவிரி கலக்கும் பூம்புகார் கடலில் – இக்
கர்மம் தொலைக்கப் புனித நீராடி – பின்
பொதிகை வெற்பில் புரிந்திடு கடும்தவம் – உன்
பூதஉடலும் அதனால் நீங்கும்!

பைசாசம் : ரதியளே!
தண்டனை கேட்கின் விடுதலை வழங்கும்;
தகைசால் நிலையோ! தாய்மைப் பண்போ!
சகுந்தலை அடைந்த இன்னல் பலவும்–
சார்ந்திட வேண்டும் எனக்கு – நன்கு!

இரதி : பொருமிடாய் பூதமே – மானிடப் பிறவி நீ –
பூதலத்தெடுக்கப் போகும் உன் துயரம்!

பைசாசம் : இது போதாது – இது போதாது!
என்னையும் பெண்ணாய்ப் பிறக்க வைத்திடு!
எண்ணிலாத் துன்பம் பெற்றிடச் செய்திடு!

இரதி : கலங்காய் பூதமே! நீ விரும்பிய வண்ணம்;
கடைசிப் பிறவியில் கண்ணகியாக,
கடலலை தழுவும் பூம்புகார் நகரில்;
தொடையல் மார்பன் கோவலன் தனக்கு;
தூய நல்இல்லறத் துணைவி என்றாகு!
கணிகை மாதவி கணவனைப் பிரிக்க – பின்
காலம் கடந்து அவன் திருந்தி வருந்த,
வணிகம் செய்ய அதன்பின் மதுரை;
வந்திட வஞ்சகம் கோவலன் உயிரை,
வீழ்த்திட வெந்தழல் புழுவெனத் துடித்து,
வெஞ்சினம் கொண்டு வேதனைப் புலியாய்,
சிலம்பை உடைத்துச் சிந்திய மணியால்
சிம்மாசனத்திருந்த மணிமுடி மன்னன்
உயிரைப் பறிக்க உண்மை உணர்த்தி,
மதுரையை எரித்த கற்பின் கனலாய்,
தணியாச் சினத்துடன் கொற்றவை யாகி;
சேரன் மலையில் கணவனைச் சேர்வாய்!

பைசாசம் : நன்றி ரதியளே!
எத்தனைத் துன்பம் பிறவியில் கிட்டினும்;
இன்தமிழ் நாட்டை அகலாதிருக்கும்–
அரிய பிறவியை எனக்கென விதித்தாய்!
அழகிய ரதியளே! அன்பொடு விடைகொடு!
அருந்தமிழ் நாட்டிற்கு அகல்வன் யானும்!
(பைசாசம் மறைதல்)

*****

மன்மதன் : (விரக்தியுடன்)

எழில்மிகு ரதியளே என்னுயிர்ப் பாவாய் – நீ
எப்படித் தடுக்கினும் பொய்மைக் காதல்;
பொழில் மரச்சருகாய் – கீழே வீழும் – வாழும்
பொல்லாங்குலகில் காதல் கருகும்!

இரதி : (கோபத்துடன்)

மன்மத உன்னை மாற்றுதல் என்பது
மாதவத்தோர்க்கும் இயலா ஒன்று!
புறப்படு! புறப்படு!
தென்னவர் நாட்டில் ஓர் தெய்வக் காதலை;
தேரா உனக்குக் காட்டி மனம் மாற்றுவன்!
(மன வருத்தத்துடன்)
ஆ... என் இனியவள் சகுந்தலை...! ... ம்... ம்...
இனி அவள் என் செய்வாளோ? – ஆ!

மன்மதன் : ரதியளே!

விதி வழி என்றும் –
நடப்பது நடக்கும் –
நாமும் நடப்போம்
வா! வா!

– திரை –

# காட்சி – 18

இடம் : கானகம், கன்வர் குடில் அருகில்

இருப்போர்: பிரியம்வதை, அனுசூயா

நிலைமை : (துஷ்யந்தன் பிரிவை எண்ணிச் சகுந்தலை வருந்துவதற்கும் அவள் கருவுற்றது குறித்தும் தோழியர் வேதனைப் படல்)

பிரியம்வதை: அனுசூயா! அன்று –
அன்புடைக் கன்வர் தன்குடில் அருகே,
அன்ன நடைப்பெடை சகுந்தலை –
அன்ன இவ்விளம் வாழை மரத்தை,
அழகாய் வைத்துக் காத்து வளர்த்தார்!

அனுசூயா : ஆமாம்; உண்மை!
ஆசை மகள் போல் வளர்த்த நல்வாழை – நாம்
அண்ணாந்து பார்த்திட; வனப்புடன் உயர்ந்தது!
அய்யனும் இங்குத் திரும்பும் நாளில்,
அழகாய் – பூந்தார் பெற்று நின்றது!

பிரியம்வதை: தாருடை வாழையின் தாய்மைப் பொலிவு,
தனித்துத் தெரியினும் வாட்டம் உற்று
தலையைக் குனிந்து சுமையால் தளர்ந்து
தாக்கும் பாரம் தாங்காது சரிந்தது!

அனுசூயா : (திடுக்கிட்டு)
ஆ! எந்தன் மனதில் வந்தது நெருடல்!
ஏனடிப் பெண்ணே! இப்படி இருக்குமோ?
ஏந்திழை சகுந்தலை இவ்வாழையைப் போல;
ஏங்கிச் சுமையைத் தாங்கி இருப்பாளோ?

பிரியம்வதை: ஐய்யோ! எப்படி அப்படி; இப்படி நிகழ்வு?
ஆ! அழகியள் காத்திடத் தவறியும் விட்டோம்!
ஐய்யன் இல்லாப் பொழுதில் தவமகள் –
அறியா மனத்தில்; ஆசையும் வளர்த்தோம்!

அனுசூயா : வாழ்வாங்கு வாழ்வாள் நம்தோழி என்று –
வளர்த்தோம் காதலை! வளமுடைப் பயிராய்!
வாழையின் நிலையில் வனமகள் சகுந்தலை,
வாட்டம் உற்று; வருந்தினள் இன்று!

பிரியம்வதை: (மிக வருந்தி)
பாவிப் பெண்ணே! அன்று பஞ்சும் நெருப்பும்;
பழகுதல் கண்டு பார்த்து மகிழ்ந்தோம்!
பற்றிய காதல் நோயும் தீயும்
பழியும் பாவமும் அவளைச் சுட்டன!

அனுசூயா : அன்றொரு நாளில்; ஆற்றில் குளிக்கையில் –
ஆறாத் துயரொடு சகுந்தலை நின்றனள்?
அன்பொடு நானும் அவளைத் தொட்டு;
அன்னப் பெண்ணே! என்ன உன் நினைவு?
அரை நாழியாய் நீரில் நீ முழுகாதிருந்து –
ஆழ்ந்து யோசிப்பது ஏன் எனக் கேட்டேன்!
அறிந்தது எப்படி? நான் முழுகாதிருப்பதை – என
அதிர்ந்து கேட்டாள்! நான் ஆடிப் போனேன்!

பிரியம்வதை: ஓ. தெய்வமே!
வேலியைப் போலத் தோழியர் இருப்பர் – என
விட்டுப் போனார் முனிவர் நம் பொறுப்பில்,
விருந்து வைத்து நாம் விதியை அழைத்தோம்!
வேதனைத் துயரைச் சகுந்தலைக்கு அளித்தோம்!

அனுசூயா : வருந்தவும் வேண்டா! வருவார் முனிவர்!
வாடிய திருமகள் நிலையை உரைப்போம்!
வதுவை புரிந்திட வழி வகை செய்வோம்!
வளவன் மனையளாய் வாழ்வாள் – நம் சகுந்தலை!

பிரியம்வதை: ஆமாம்! அதுவரை!
சகுந்தலை தனக்கு ஆதரவு அளிப்போம்!
சங்கடம் தராது; ஆறுதல் தருவோம்!

– திரை –

## காட்சி – 19

இடம் : கானக நெடுவழி

இருப்போர் : கன்வர்

நிலைமை : (வெளியூரிலிருந்து ஆசிரமத்திற்குத் திரும்பும் கன்வர் தன் மகள் சகுந்தலைக்குத் திருமணம் செய்ய எண்ணம் கொண்டு உரைத்தல்)

கன்வர் : ஆ! எத்தனை நாட்கள்!
எத்தனை நாட்கள்!
எப்படி என்னால்;
இருக்கவும் முடிந்தது!

என் கண் மணியை;
என்னரும் புதல்வியை –
பிரிந்து பலநாள் –
போனேன் அதனால் –
துடித்துத் துவண்டு;
சோர்ந்து இருப்பள்!
சென்று நம்குடிலைச்
சேர்ந்திட வேண்டும்!

(மெல்ல நகைத்து)

முற்றும் துறந்தவன்–
விஸ்வா மித்திரன்!
மேனகைக் காதலில்–
விழுந்து கிடந்தவன்!
பெற்ற நற்பெண்ணின்–
பெருமை அறிந்திலன்!

பெற்றேன் வாய்ப்பு–என்
பெண்ணாய் வளர்த்தேன்!

பொக்கிஷம்! புதையல்!
பூதலப் பெருந்தனம்!
பூமகள் போன்றவள்!
பொன்மகள்! என்மகள்!
நீள் நெடும் சிறகுடை
சகுந்தப் பறவை
குழந்தையைக் காத்ததால்
சகுந்தலை என்றே
பெயரும் இட்டுப்
பெருமிதப் பட்டேன்!

பெண்ணாய் அவளைப்
பெற்றதென் பாக்கியம்!
கண்ட நாள்முதல்
கைகளில் தாங்கித்
தோளில் கிடத்தித்
தூங்கவும் வைத்தேன்!

சொந்தமும் பந்தமும்;
சேர்ந்திரா எனக்குச்
சுற்றமாய் ஆனவள்,
சுந்தரி! சகுந்தலை!
சொல்லில் குழைவு!
சுகம் தரும் கனிவு!
செயலில் விரைவு!
செய்யவள் அழகு!

பருவம் எய்திய
பாவையைப் பிரிய—
பிரியப் படாததால்;
பேசாதிருந்தேன்!
பார்த்திட வேண்டும்!
பார்த்திட வேண்டும்!

பார்த்திபன் போன்ற
பையனைப் பார்த்து—

பாசம் பொழியும் — துர்
வாசர் உட்பட—
பலரையும் அழைத்து;
விருந்துக்கென்று
பலவகைக் காய்கறி;
பதார்த்தம் செய்து—
பார்த்துப் பார்த்துப்
பந்தி பரிமாறுவேன்!

வயிறு நிறைந்தால்
வாய் தரும் ஆசிகள்!
விருந்தைக் கொடுத்து
வாழ்த்தைப் பெறுவேன்!

வேகமாய்ச் செல்வோம்!
வேண்டுவன செய்வோம்!
விரைவோம்! இறையருள்
வேண்டுவோம்! ஓம்! ஓம்!

(விரைவாய்ச் செல்லல்)

— திரை —

# காட்சி – 20

இடம் : கன்வர் குடில்

இருப்போர் : கன்வர், பிரியம்வதா, அனுசூயா, சீடர்கள்

நிலைமை : கன்வர் சகுந்தலைக் காதலையும் அவள் கருவுற்றதையும் அறிந்து வேதனைப்பட்டு அவளைப் பார்க்கவும் விரும்பாது, அவளைத் துஷ்யந்தனிடம் சேர்ப்பிக்க சீடர்களுக்குச் சொல்லி அனுப்புதல்)

கன்வர் : மகளே! சகுந்தலை!
மகளே! சகுந்தலை! –ம்–

எங்கே சகுந்தலை?
எவரும் இங்கிலை!
எங்குப் போயிருப்பர்;
என் வரவு பார்த்திராமல்.

(தான்வைத்த வாழை மரத்தைப் பார்த்து மகிழ்ந்து)

ஆ நான் வைத்த வாழை,
நன்கு குலை தள்ளி;
நவிலவும் இயலாமல் –
நாணத்தால் தலை தாழ்த்தும்!
ம்!ம்! இருக்கட்டும்! – வாழைக்
காய்முற்றிப் பழமாகிக்
கண்ணவளின் திருமணத்தில்;
கடைசிப் பந்திவரை–
களிப்போடு இடம் பிடிக்கும்!

ம்! நல்லது நடக்கட்டும்! –வாழை
நன்றாய்க் கனியட்டும்!
ஹா! ஹா! (சிரித்தல்)

(தோழியர் வருவதைப் பார்த்து)

செல்ல மகள் தோழியரே!
சீக்கிரமாய் வாருங்கள்!
சந்தோஷச் செய்தி சொல்வேன்!
சடுதியிலே வாருங்கள்!

(அருகில் அவர்கள் தயங்கிவருவதைக் கண்டு)

ஏன்! என்ன தயக்கம் – உடன்
என்னருகில் வாருங்கள்!

(தயங்கித் தயங்கித் தோழியர் அருகில் வருகின்றனர்.)

பிரியம்வதை : ஐய்யன்மீர்! மன்னிப்பீர்!
அறியாது பிழை செய்தோம்!

கன்வர் : என்ன! என்ன பிழை?
எங்கென் சகுந்தலை!
ஏதும் உடல்நலக்
குறைவோ? கேடோ?

அனுசூயை : இல்லை! இல்லை!
எப்படிச் சொல்வோம்! ஓ....
ஏந்திழையும் இவ்வாழை...
ஈன்றிடுதல் போல் உள்ளாள்!

கன்வர் : ஆ! என்ன நடந்தது!
எப்படி நடந்தது!

பிரியம்வதா : ஐய்யனே! தாங்கள்–
இங்கிலாப் பொழுது;
எழுதிய விதியால்;
இயற்கைச் சதியால்;
எங்கிருந்தோ வந்தான்!
எழிலன்! துஷ்யந்தன்!

கன்வர் : ஆ! ஆ!

அனுசூயை : ஆம்! ஆம்!
பற்றிய கையும்— உடன்
பாவையை அணைத்தது;
பற்றற்ற முனிவர் மகள்;
புனிதமும் அணைந்தது!

கன்வர் : ஓ! கடவுளே! கடவுளே!
மோட்சம் போக
முனைந்து தீர்த்தங்கள்—
மூழ்கிடப் போனேன்!
முடிந்து போனேன்!

மோசம் போனேன்!
நாசமும் ஆனேன்!
பாசம் வைத்த நான்
பாவியும் ஆனேன்!
(சினந்து பொங்குதல்)

பிரியம்வதா : ஐய்யனே! வேண்டாம்!
ஆத்திரம் வேண்டாம்!
ஆராத் துயரினில்—
தீராப் பழியுடன்,
தண்டனை பெற்று
தவித்திருக்கின்றாள்!
தவமகள் தளர்ந்தே—
அவமகள் ஆனாள்!

கன்வர் : (கோபத்துடன் பொறுமி)
ஆசை மகளே! ம் (பல்லைக் கடித்து)
அழகிய சகுந்தலை!
அழித்தனை கௌரவம்!
அளித்தனை பெரும்பழி!

வேண்டாம் வேண்டாம்!
விருந்தாய் இருந்தவள்:
வேம்பென ஆனாள் – எனக்கு
வேதனை தந்தாள் – அவள்
வேண்டாம் வேண்டாம்!

விலகிச் செல்லட்டும்!
விருப்பம் இல்லை இனி;
விலைபோன பெண்ணைப் பார்க்க!

(வேதனையுடன் நகைத்து) ம்
—அன்று காட்டில்
மேனகைக் காட்டிய —
மோகத்தின் குழந்தையை;
முகம் பார்க்க விரும்பாது—கண்
மூடிக் கை மறைத்தான்!
விஸ்வாமித்திரன்!

தன் தவம் கெட்ட
வேதனையால்— பெரும்
வெட்கத்தால் அந்நிலை இன்று —
கன்வனுக்கானது!
கண் என வளர்த்த அக்
கன்னியைக் கண்ணெடுத்து— இனி
கனவிலும் பாரேன்! — நான்

கல்நெஞ்சன் ஆனேன்!
காதல் கறைபட்டுக்
கருத்தரித்தவளும்;
கணவனைச் சேரட்டும்!

(சீடர்களை அழைத்து)

செல்லுங்கள்! அவளுடன்
சீடர்களே தலைநகரம்!
சென்று துஷ்யந்தனிடம்
செப்புங்கள் ஒப்படைத்து
சீர்கொடுத்தார் கன்வர் —நீ
சீரழித்த தன் பெண்ணை —எனச்
சீறிச் சினந்து சொல்லி;
சீக்கிரம் திரும்பிடுங்கள்!

பாபம்! பாபம்! — என்
கண்கொண்டு இவளை — இனிப்
பார்ப்பதும் பாவம்—
போய்த் தொலையுங்கள்!

(தயங்கிய சீடர்களைப் பார்த்து)

ம்! சீக்கிரம்! சீக்கிரம்!
அழைத்துச் —செல்லுங்கள்
அவளைக் கங்கையில் — நீர்
ஆடவிட்டு— ஆள்வோனின்
அரண்மனையில் விட்டுவிட்டு
நீங்கிப் பின் வரும்போது;
நீங்களும் கங்கையில்;
நீராடி — தலைமுழுகித்
தொலைத்து வாருங்கள்!
செல்லுங்கள் சீக்கிரம்!

(சகுந்தலையைத் துஷ்யந்தனிடம் ஒப்படைக்கச் சீடர்களிடம் கட்டளையிட்டுக் கோபமுடன் குடில் செல்லல்)

— திரை —

# காட்சி – 21

இடம் : கங்கை படித்துறை

இருப்போர் : சகுந்தலை

நிலைமை : (கன்வர்தம் சீடர்கள் பொறுப்பில் சகுந்தலையைத் துஷ்யந்தனிடம் கங்கையில் நீராடியபின் சேர்க்க உத்தரவிட்டார். எனவே கங்கையில் நீராடும்போது சகுந்தலை தன் உள்ளக்குமுறலை வெளிப் படுத்துதல்)

சகுந்தலை : (துயருடன் கங்கை நதி நீரில் மூழ்காது நின்றபடி)

இமயம் பிறந்த கங்கை நதியே!
என்னிலை தன்னை எண்ணிப் பாராய்!
இத்தனை இன்னல் விதியால் நேர்ந்தது!
இழிச்சொல் பழிச்சொல் எனக்கென ஆனது!
பெற்றவர் வெறுத்தனர்! பிறந்த போதே!
பூமியில் கிடத்தித் தாய் அனாதையாக்கினாள்.
பெயரிட்டு வளர்த்தவர் புறந்தள்ளி விட்டார்!
பிரிந்தவர் வாராது காலம் தாழ்த்தினார்!

பெண்ணாய்ப் பிறந்தது பெருந்தவறானது!
பேதையின் காதல் பிறழ்நிலையானது!
பிரியத் தோழியர் கதியற்றிருந்தனர்;
பிள்ளையைச் சுமந்ததால் உடல் தளர்வானது!

போதும் பிறப்பு! போனதென் சிறப்பு!
பிச்சியின் நிலையில் தினம் தினம் மடிந்தேன்!
பூமியில் பிறந்த பெண்டிரே! என்நிலை,
பெற்றிட வேண்டாம்! கற்பைக் காப்பீர்!

பெற்றோர்க்கு என்றும் பெருமை சேர்ப்பீர்!
பொறுமையாய் இருந்து பெயரைக் காப்பீர்!
பெயராக் களங்கம் எனக்கென ஆனது!
பெருகும் கங்கையில் என் கண்ணீர் கலந்தது!
—எனினும்

பொருந்தாத் திருமணம் இல்லை நான் செய்தது!
பெற்ற நற்கணையாழி உற்ற துணையானது!
புகழுடை மன்னர் என் கவலையைத் தீர்ப்பார்!
புளகாங்கிதத்துடன் நன்கு வரவேற்பார்!

அரசுக் கட்டிலில் மன்னவன் தன்னுடன்
அமர்ந்து மக்களின் வாழ்த்தினைப் பெறுவேன்!
முரசு முழங்கிட ஆரவாரத்து
முழக்கம் கேட்டு என் மகன் மகிழ்ந்து –

வயிற்றில் துள்ளும் அதை என்னவரும்;
வியப்புடன் கண்டு சிந்தை குளிர்வர்!
வனத்திற்குக் கணவரை அழைத்துச் செல்வேன்!
– கன்வரின்
வாழ்த்தைப் பெற்றுச் சிறப்புடன் வாழ்வேன்!
– எனவே

பெற்ற அவப்பெயர் என் துயரெல்லாம்;
பெருகும் கங்கையில் நீராடத்தீரும்!
புனிதம் தந்து நல்வினை யாக்கும்!
புண்ணிய கங்கை என் குறை தீர்க்கும்!

(சகுந்தலை தன் கைகளால் நீரை விலக்கி விலக்கி
மூன்று முறை நன்கு மூழ்கி நீராடுதல்)

– திரை –

## காட்சி – 22

இடம் : அரண்மனைச் சோலை

இருப்போர்: சகுந்தலை, துஷ்யந்தன்

நிலைமை : சகுந்தலை கங்கை நதியில் நீராடிவிட்டு, துஷ்யந்தனின் அரண்மனை நந்தவனத்தை அடைந்து அங்கு அவனைக் காணுகின்றாள். சீடர்கள் கானகம் திரும்புகின்றனர்)

சகுந்தலை: மன்னவ!

துஷ்யந்தன்: யாரது!

சகுந்தலை: நான் தான் தங்கள்!

துஷ்யந்தன்: தங்கள்....

சகுந்தலை: போதும் குறும்பு – இனிது போக்குவம் பொழுது!

துஷ்யந்தன்: யார் நீ பேதையே உரிமையால் விளித்தது ?
எப்படிப் புகுந்தனை என் சோலையில் பெண்ணே ?
எங்கே காவலர் ? யாரும் இங்கிலை ?

சகுந்தலை: என்ன மன்னவ ? எனக்குக் கலக்கம்
ஏற்படுத்திடவும் நினைத்தனை போலும் ?
அன்பரே தாங்கிடேன் ஆற்றி இருந்த
துன்பப் பிரிவு! துடைத்திடு கண்ணீர்!

துஷ்யந்தன்: உனக்கும் எனக்கும் என்ன உறவு ?

சகுந்தலை: உறவு – உறவு – (விரக்தியுடன்)
ம்... உறவாட வந்தவர் – இன்று
உறவு வாடப் பேசுதல் ஏன் ?

துஷ்யந்தன்: உறவா ? என்ன இது உன்மத்த உரைகள் ?

சகுந்தலை: (கோபத்துடன்) மன்னவ!
பொறுமைக்கும் உண்டு பெயரா எல்லை – என்னைச்
சிறுமை செய்திடில் சீறுவள் யானும்!

துஷ்யந்தன்: பொறுத்தேன் யானும் பெண் என்பதால்!

சகுந்தலை: நான் யாரெனப் புரிந்தலை – ஆம்
பிரிந்ததும் மறப்பது மன்னவர் வழக்கமே!

துஷ்யந்தன்: என்ன ? காதல் புரிந்ததா ?
உன்னைப் பிரிந்ததா ?
பிதற்றல்! பெரும் பிதற்றல்!

சகுந்தலை: மன்னவ! இப்படிப் பேசுதல் முறை அல!

துஷ்யந்தன்: முறைகள் எல்லாம் எனக்கு நிறையத் தெரியும்;
முடிவாய்ச் சொல்லிடு பெண்ணே! யார் நீ ?

சகுந்தலை: யார்நீ..... யார் நீ....
என்னைப் பார்த்துக் கேட்கும் கேள்வியோ ?
எண்ணிப் பார்த்திடு எந்தன் மன்னவ!
காந்தம் என்றனை அன்றென் கண்ணை – அது
கவரும் உன்மனம் இரும்பு என்றனை!
தெளிந்தேன் மன்னவ! தெளிந்தேன், இன்று
அழிந்தேன் எனினும் தெளிந்தேன்! ஐய்ய
இரும்பு தான் உன்மனம் கடினம் கடினம்!
ஈரம் தன்னை இரும்பில் தேடல்!

துஷ்யந்தன்: போய் விடு பேயே!

சகுந்தலை: .... – பிரியும் முன்
உரிமையால் அழைப்பேன் என உரைத்தீரே!
உரிமையால் அழைப்பதும் இப்படித் தானோ?
நன்னகர் அழைத்து நங்கையர் கையால்–
நலங்கிடச் செய்வேன் என்றனை; அன்று!
இன்றோ! என் நலங்கெடச் செய்து;
கலங்கிடச் செய்தனை! முறையோ இறைவ!

துஷ்யந்தன்: போவெளியே! இனிப் பொறுப்பது கடினம்!

சகுந்தலை: விதியே... விதியே! (அரற்றுதல்)
இறுதியாய்க் கேட்கிறேன் எந்தன் மன்ன!
உறுதியாய்ச் சொல்லிடு உந்தன் பதிலை!
கானகம் வந்தது நினைவில் இல்லை?

துஷ்யந்தன்: கானகம் வந்ததா? கனவிலும் இல்லை!

சகுந்தலை: என்னைக் கண்டது? காதல் கொண்டது?

துஷ்யந்தன்: இன்றும் இல்லை!

சகுந்தலை: இல்லையா தெய்வமே!
நீயும் என்பக்கல் இல்லையா? – சரி
என்னைக் கடிமணம் செய்தது?
கலந்து மகிழ்ந்தது?

துஷ்யந்தன்: இல்லை! இல்லை! என்றும் இல்லை!

சகுந்தலை: இல்லை இல்லை நீதி உன் நாட்டில்!

துஷ்யந்தன்: நீதியைப் பற்றி நீ என்ன சொல்வது
நீலியே சாட்சியம் ஏதும் உளதோ?

சகுந்தலை: சாட்சியம் காட்டிடில் ஏற்றுக் கொள்வீர்
(மிக்க சினந்து) அப்படித்தானே ?

துஷ்யந்தன்: (அலட்சியமாய்)
ம்... சாட்சியம் தன்னை ஏற்றுக் கொள்ளலாம்!

சகுந்தலை: இதோ! (கைவிரலை நீட்டிக் காட்டல்)

துஷ்யந்தன்: (நகைத்து)
என்ன இது வெறுங்கை சாட்சியம் ?

சகுந்தலை: ஆ... கணையாழி எங்கே ?
ஆ... கங்கையில் குளிக்கையில்!

துஷ்யந்தன்: உன் கை மோதிரம் நழுவி விழுந்ததோ ?

சகுந்தலை: ............. கேலியும் வேண்டா ?
மற்றொரு சாட்சியம் என்னிடம் உளது! – நீ
எனக்கெனத் தந்த இருபெரும் பரிசில்
இழந்தேன் ஒன்று! இருப்பது ஒன்று!

துஷ்யந்தன்: இருப்பதை..... ?

சகுந்தலை: காட்டவும் வேண்டுமோ ? நீயே உணர்ந்திடு!
(மன்னன் கையைப் பலவந்தமாக இழுத்து
தன் வயிற்றில் தொட வைக்கின்றாள் சகுந்தலை)

துஷ்யந்தன்: (கோபத்துடன் அறைந்து)
எவனோ கொடுத்த பெரும்பழி தனக்கு;
என்னைத் தகப்பன் ஆக்கிட நினைத்தனை!
தொலைந்து போ! உன்னைப் பார்க்கினும் பாபம்!
(உதறித் தள்ளுதல்)

சகுந்தலை: மன்னவ! இது முறையில!
மன்னவ இது முறையில... அய்யோ!
விதியே என்னை விரைந்து அழித்திடு!
வீசும் பாசக் காலனே! அழைத்திடு! (அழுது நீங்குதல்)

– திரை –

## காட்சி – 23

இடம் : கங்கை நதியின் ஓரத்தில்

இருப்போர் : மீனவர் இருவர்

நிலைமை : (கங்கையில் படகில் சென்று மீன் பிடிக்கும் மீனவர் இருவரின் உரையாடல்)

முதல்வன் : ஏலே பயலே இழுக்குது வேகம் –
இங்கே வாலே துடுப்பை வலிக்க!

இரண்டாமவன்: செய்யற தெல்லாம் இங்கே நானு – நீ
சுகமா தின்னு பொரிச்ச மீனு!

முதல்வன் : வலையப் போடுவ துடுப்ப! – ஆ.. இடுப்ப –
வாயு பிடிக்குது வலியா வலிக்குது!

இரண்டாமவன்: படகு – வலிக்கிறேன் நானு; வலிக்குது உனக்கு!
வயத்த எரிச்ச – வயத்த வலிக்கலே ?

முதல்வன் : சிக்குத் தலையா! மக்குத் தலையா!
திமிரா உனக்கு; திருக்கை மீனா –
திமுறிப் போடுறே; துடுப்ப இப்ப!

இரண்டாமவன்: சும்மாக் கிடவே சுரும்பானாட்டம் –
எம்மாந் தொலவு போகணும்; எளவு
இராலைப் பிடிக்க; விராலப் பிடிக்க!

முதல்வன் : வலைய வீசுலே! வலைய வீசுலே!!
அலையில ஒதுங்குது ஔவா மீனு!

இரண்டாமவன்: கெண்டை யாட்டம் துள்ளா தேலே;
கிழக்கப் போனா கிடைக்குது கெழுத்தி!

முதல்வன் : கடலு மீனும் கங்கையில் நீந்தும்!
கங்கை மீனும் கடலில் துள்ளும்!
மாங்காத் தலையா என்னைப் பிடிக்கலை யான்னு–
தேங்காய்ப் பாறை மீனும் கேக்கும் – ஆ... ஆ...
இங்கப் போடுலே இழுப்பு வலையை! ·

இரண்டாமவன்: கஞ்சப் பயலே வஞ்சர மீனை;
காட்டு றேனே கொஞ்ச – தொலவுலே!
(கலையத்துக் கஞ்சி குடிப்பதைப் பார்த்து)
பார்த்துக் குடிவே! பார்த்துக் குடிவே!
கஞ்சிக் கலையம் கழுத்துலே மாட்டிக்கும்!
மிஞ்சிப் போனா மெதுவா குடிக்கலாம்!

முதல்வன் : ஏலே –
வருது பாருலே வகையா சிறு சுரா!
வலைய வீசுலே வசமா – சிக்கும்!

இரண்டாமவன்: குட்டிச் சுராவ பிடிச்சா வலையும்–
குட்டிச் சோரா போயிடு மேலே!

முதல்வன் : சிக்குத் தலையா! சொன்னதச் செய்யிலே!
மக்குத் தலையா! வலைய வீசுலே!

இரண்டாமவன்: ம்... வலையப் போடுறேன் வர்ரது வரட்டும்!
(வலையை வீசுதல்)
ஏலே
சிக்கிக் கிடுச்சி சீக்கிரம் வாவே!
என்னை இழுக்குது இடுப்பப் பிடிவே!
(பெரிய மீனைப் பிடித்து படகில் போட்டவுடன்)

முதல்வன் : போடுலே துடுப்ப; வெங் கடுப்ப!
போவுது பொழுது; ஆவுது நேரம்!

கரையிலே நிறுத்திக் கட்டுலே படகை;
நிறைய மிச்சம்; மச்சம் கொடுக்கும்!

(கரைக்கு வந்து, படகைக் கட்டுதல்)

இரண்டாமவன்: போடுவ துண்டு; எனக்குப் பாதி – சுராவ – வித்துப்
போடணும்; பிறவு தேடணும் விறவு!

(மீனைப் பாதியாகப் பங்குபோட்டு வெட்டும்போது)

முதல்வன் : ஏலே! ஏதோ நெருடுது கையிலே!

இரண்டாமவன்: என்னாவே? மீனு வையித்திலே!

முதல்வன் : இரு இரு எடுக்கிறேன் இந்தா – பாரு!

இரண்டாமவன்: மோதரம் போல இருக்குல பாருலே?

முதல்வன் : மோதரமா? ஏலே அப்ப எங்கல ஆளு?

இரண்டாமவன்: சுராமீனு....
முழுங்குன மனுசன் ஜீரண மானான்!
மோதரம் மட்டும் ஜீரண மாகல!

முதல்வன் : இங்கப் பாருவே! மோதரம் எனக்கு! மீனு உனக்கு!

இரண்டாமவன்: ஆள முழுங்கின மீனு எனக்கா?
வேணாம் மீனு; வேணும் மோதரம்!

முதல்வன் : எடுத்தது நானு; கொடுத்தது நானு;
எனக்குத் தான் – இந்த மோதரம்!

இரண்டாமவன்: மோதர முன்னு சொன்னவன் நான்லே!

முதல்வன் : மோதரம் எனக்குலே!

இரண்டாமவன்: மோதரம் எனக்குலே!

இருவரும் : மோதரம்! மோதரம்!

(ஒருவரிடமிருந்து ஒருவர் மோதரத்தைக் கைப்பற்ற நினைத்தல்)

மோதரம்! மோதரம்!

(முட்டி மோதிக் கொள்ளுதல்)

முதல்வன் : ஆ... தலை... தலை; எலே தறுதலை!

(மோதரத்தைத் தொலைத்துவிடல்)

அய்யோ எங்கல மோதரம்!

இரண்டாமவன்: ஆமா எங்கலே மோதரம்!

முதல்வன் : ஏன்லே இப்படி தொலைச்சு பிட்டியே
எங்கன தேடுவ ஆத்து, மணல்ல!

இரண்டாமவன்: ஆர மீன பிடிச்ச கதையா
ஆச்சுலே; போச்சுலே; தேடுவ நீயும்!

முதல்வன் : எனக்கு இடுப்ப பிடிச்சது இன்னும் விடலே;
இப்பக் குனிய என்னால முடியல!

இரண்டாமவன்: அப்ப மோதரம் கிடைச்சா நானே எடுத்து...!

முதல்வன் : வேணா வேணா நானும் தேடுறேன்!

இரண்டாமவன்: (தனிக்குரல்)
ஆங், இங்கென கிடக்குது –
அவன் அங்கன தேடுறான் –
நாமே இத எடுத்துக் கிடுவோம் –
அவனை ஏய்ச்சிப் பிடுவோம்!
கழுகுப் பயல்லே.... ! கண்ணுல காட்டினா
கடாசிக்கிட்டே லவுட்டிப்புடுவான்!
ஆங், மறச்சிக் கிடுறேன் செலவுக்கு ஆகும்!

முதல்வன் : ஏன்வே இன்னும் கிடைக்கலை யாவே?

இரண்டாமவன்: எங்கவே கிடைக்கப் போவுது – ம்
இப்போ பொழுது போவுது!

முதல்வன் : சரி சரி! வாவே பிறவு தேடலாம்!

(துண்டாடிய மீனை இருவரும் எடுத்துச் செல்லல்)

– திரை –

# காட்சி – 24

இடம் : கங்கைக் கரை

இருப்போர் : மீனவர் இருவர், அமைச்சர், காவலர்

நிலைமை : (காலச் சூழலில் ஐந்தாண்டுகள் கடுகி விரைகின்றன, முன்பு மோதிரத்திற்காக மோதிக்கொண்ட அதே மீனவர்கள் ஐந்தாண்டுகளுக்குப் பிறகு வழக்கமாகச் சந்திக்கின்ற ஒரு நாளில்...)

முதல்வன் : எங்கன போனான் வக்கனக் கிறுக்கன்!
திங்கப் போனா திரும்பறதில்லே – ஆங் வரட்டும்!
சங்கப் பிடிச்சி சாத்துறேன் வடுவா!
கழுத்த முறிச்சி கரையிலே போடுறேன்!

இரண்டாமவன்: ஏன்வே கத்தற! நான் தான் வர்ரனே!
ம்.... என்னோட வேதனை எனக்குத் தெரியும்!

முதல்வன் : ஏ(ன்)வே ஏதும் மீன்எண்ணெய் குடிச்சியா ?
சோவப் பிடிச்ச பொணமா நிக்குற!

இரண்டாமவன்: ம்... காசு இருந்தா சோபை இருக்கும்!
காசு இல்லே சோவ தான் பிடிக்கும்!

முதல்வன் : பேசற தெல்லாம் தத்துவ முன்னு–
பேத்துறி யாவே தத்துபித் துன்னு!

இரண்டாமவன்: இல்லவே வயத்து எரிச்ச, வாயிலே தெரியும்!

முதல்வன் : என்னவே நடந்தது சொல்லுவே சீக்கிரம்! – வலை
பின்னற வேலை பெரிசா கிடக்குது!

இரண்டாமவன்: ம்... அதையேன் கேக்குற ?
வயத்தக் கட்டி வாயக் கட்டி;
வருஷா வருஷம் வட்டியக் கட்டினேன்;
பயமா இருந்தது இந்தத் தடவே–
மீட்கல் லேன்னா மூழ்கிப் போகும்!

முதல்வன் : மூழ்கினா என்னவே; வலையப் போட்டு–
மெதுவா இழுப்போம்; வர்றது வரட்டும்!

இரண்டாமவன்: தம்பிடி வட்டி அம்புட்டு தான்னு – நான்
நம்புற மாதிரி அப்பச் சொல்லி – தம்படிக்குத் தம்படி
வம்படித் தனமா வாங்கிட் டான்லே!

முதல்வன் : யாருவே ?

இரண்டாமவன்: அந்த வட்டிக் கடை முட்டைக் கண்ணன்!

முதல்வன் : ம்.. மாட்டிக் கிட்டே – அடகுப் பொருளை
மீட்டுக் கிடறது மிகமிக கஷ்டம்!

இரண்டாமவன்: அசலத் தாண்டி வட்டி நின்னுது;
அடகுல இருந்தது அஞ்சே வருஷம்!

முதல்வன் : – ஏன்வே உன்கிட்ட
அடகு வைக்கப் படகத் தவிர;
அதிகப்படியா எதுவும் இல்லையே!

இரண்டாமவன்: அடக்குவ நாக்கே! துடுக்காப் பேசினே...
அறுத்துப் போடுவேன் உப்புக் கண்டம்!

முதல்வன் : சிக்குத் தலையா! மக்குத் தலையா! – நாக்க
செம்மறி ஆட்டுக் கறியா நினைச்சியா ?
தெம்பா காட்டுவே; மீட்டத எனக்கு;
தெரிஞ்சி கிடறேன் அதையும் நானு!

இரண்டாமவன்: இதோ பாருவே! – இதோ பாருவே!

முதல்வன் : – ஆங் மோதரம்...
அஞ்சு வருஷம் ஆனதுனாலே – ஏன்வே
அடையாளமும் தெரியா துன்னா
நெஞ்சுத் திமிரா; நீட்டிக் காட்றே!
நெசமா – இது அந்த மோதரம் தானே ?

இரண்டாமவன்: சும்மா கிடவே சுரும்பா னாட்டம்!
எம்மா நாழி, நான் மணல்ல தேடி,
எடுத்தேன் மோதரம் – இது எனக்குத் தான்வே!

முதல்வன் : திருட்டுத் தனமா அமுக்கிக் கிட்டு;
திமிருத் தனமா பேசிறி யாவே ?
மோதரம் என்னுது! முறையாக் கொடுத்துடு!

இரண்டாமவன்: மோதரம் கேக்குற முகரையப் பாரு!

முதல்வன் : மோதரம் என்னுது!

இரண்டாமவன்: மோதரம் என்னுது!
(அங்கு வருகின்றார் அமைச்சர்)

அமைச்சர் : என்ன இங்கே இப்படி இரைச்சல் –
இருவருக்குள் எதற்குச் சண்டை ?
ஏவல! அவர்களை இங்கே கொணர்க!
(அவர்கள் வந்ததும்)
என்ன நடந்தது! ஏன் இப் பூசல்!

முதல்வன் : கும்புடுறோம் சாமி!
மோதரம் ஒன்னு கங்கை நதியின்;
மீனின் வயிற்றில் இருந்தது தெரிஞ்சது!
புடிச்சது அவரு எடுத்தது நானு!
அடிச்சிக் கிடறோம் மோதரத் துக்கு!

அமைச்சர் : மோதரம் ஒன்று மீனின் வயிற்றிலா –
விந்தை! விந்தை!
முதலில் அதனை எனக்குக் காட்டுக!

முதல்வன் : இதோ இதுதான் சாமி!
(மோதரத்தைக் காட்டடல்)

அமைச்சர் : (அதனை வாங்கிப் பார்த்து) – ஆ
துஷ்யந்த மன்னரின் முத்திரை மோதிரம்! இதற்கு;
சொந்தம் கொண்டாடுவர் மீனவர் இருவர்!
காவல! இவர்களை உடன் இழுத்து வருக!
கடுகி விரைவோம்; மன்னவன் அவைக்கு!

- திரை –

# காட்சி – 25

இடம் : அத்தினாபுரத்து அரண்மனை

இருப்போர் : துஷ்யந்தன், அமைச்சர், காவலர், மனக்குரல்

நிலைமை : (சகுந்தலை கங்கை ஆற்றில் தொலைத்த துஷ்யந்தனின் மோதிரத்திற்காக மோதிக் கொண்ட இரு மீனவர்களை அரசவைக்கு அமைச்சர் கொணர்தல்)

அமைச்சர் : ஆதவ குலத்துத் தோன்றல் வாழிய!
மாதவ கங்கை நாடன் வாழிய!

துஷ்யந்தன் : அமைச்சரே உளதோ ஏதும் செய்தி!

அமைச்சர் : ம்... மோதிரம் ஒன்றால் மூண்டது பகைமை!

துஷ்யந்தன் : மோதிரத்தாலா ?

அமைச்சர் : – ஆம் மன்னவ!
கங்கைக் கரையின் கவின்மிகு பகுதி – அங்குக்
கடலைப் போன்ற நதியின் நீரில் – முன்பு
செங்கண் சிறுசுரா வலையில் சிக்கிட – வலையர்
சிரித்து அறுத்தனர்; கிடைத்தது மோதிரம்...
பிடித்தது அவனாம்; எடுத்தது இவனாம்;
அடித்துக் கொண்டனர் மோதிரத் திற்கு –
தங்களின் முத்திரை மோதிரம் அதுவெனத்
தெரிந்து கொண்டதால் – உடன்
இங்கு இவர்களை
இழுத்து வந்தேன்!

துஷ்யந்தன் : எங்கே மோதிரம் ? காட்டுக அதனை!

அமைச்சர் : இதோ!

துஷ்யந்தன் : (மோதிரத்தைப் பார்த்து)
ஆ.. கணையாழி—என் கையின் பன்னாட்
கணையாழி!
கானகம்! கடிமணம்!
கண்மணி! சகுந்தலை!
ஆ. என் தலையில் பெருஞ்சுமை –
இடியெனத் தாக்கும்!

(பழைய நினைவுகள் மனத்தில் தோன்றல்)

அமைச்சர் : என்ன மன்னவ?

துஷ்யந்தன் : அமைச்ச! எனக்குத் தனிமை தேவை – மனக்
குமைச்சல் என்னைக் குன்றிடச் செய்யும்!

அமைச்சர் : – மன்னவ!
அமைதி பெறுக; அகலுவம் யாமும்!

(அமைச்சரும் மற்றவர்களும் நீங்குதல்)

நினைவுக்குரல்: யாரிவள் மாதினள்? ஊர்வசிக்கு உறவோ!
வார்குழல் இரம்பை, வனப்பை பெற்றனள்!
மேனகை மரபோ? திலோத்தமை சுற்றமோ?
கானகக் கன்னியோ? காந்தருவ மகளோ?
யாரிவள்? யாரிவள்?

(தோழியின் குரல்
கேட்கிறது) : சகுந்தலை..... சகுந்தலை!

துஷ்யந்தன் : ஆம்... சகுந்தலை... சகுந்தலை!
ஏன் என் மனம் இப்படி துணுக்குறும்
என்னதான் நடந்தது? என்ன தான் நடந்தது?

நினைவுக்குரல்: தன்னுயிர் வைத்து என்னுயிர் தன்னை;
தன்னிடம் கொண்ட தகைமை மறக்கேன்!
நாட்டை மறக்கலாம்; வேட்டை துறக்கலாம்;
நாயகி தன்னை நான் அடைந்தக்கால்!
(குழப்ப ஒலிகள்)
ஆம். சகுந்தலை நீ காதலை அறிந்திலை!

துஷ்யந்தன் : (அரற்றி) இல்லை துஷ்யந்த நீ காதலை அறிந்திலை!
என்னுயிர் சகுந்தலை நீ காதலை மறந்திலை –
சகுந்தலை! சகுந்தலை!
எந்தன் உயிரே எழில் மணிப் பாவாய்!
என்னைப் பிரிந்து எப்படி வாழ்வாய்!

நினைவுக்குரல்: என் வில்லைப் பழித்த புருவமும் விழியும்...
மறைத்தது நான்தான் மருட்சியும் வேண்டா?

துஷ்யந்தன் : வில். என் வில்....
என் கை வில்லே! என் கை வில்லே!!
இத்தனை நாட்கள் என்னிடம் இருந்தும்
உன்னை ஒத்த சகுந்தலைப் புருவம்
உணர்த்திட வில்லை, எந்தன் வில்லே – அதை
உரைத்திட வில்லை, எந்தன் வில்லே!
நீ மட்டும் எனக்கு எதற்கு – நீங்குக! நொறுங்குக!
(வில்லை வீசுதல்)

நினைவுக்குரல்: என்னை நம்பிடின் எடுத்திடு மாலை!
என்னுயிர் மறந்து எனக்கென் வேலை?

துஷ்யந்தன் : சகுந்தலை.... சகுந்தலை!
அமுதப் பாவையே அருந்ததி அன்னோய் –
என்னை நம்பி எடுத்தனை மாலை .. ஐய்யோ....
என்னுயிர் மறந்த எனக்கேன் மாலை!
(முத்து மாலையைப் பிய்த்து எறிதல்)

நினைவுக்குரல்: கலங்கிடாய் என்னுடலில் இலங்கிடு உயிரே!
கடிநகர் சென்றதும் கடமையால் அழைத்து;

நலங்கிடச் செய்தும் நறுமலர் பொழிந்தும்;
நானுனை... மறப்பேன்... ஆ....

துஷ்யந்தன் : ஆ... மறப்பேன் என்று உரைத்த தனாலோ...
மறந்தேன் மறந்து – உன் நலங்கெடச் செய்தேன்,
கலங்கிடு! கலங்கிடு! கண்ணே கலங்கிடு!

நினைவுக்குரல்: பெண்ணின் பெரும்பேற்றைப் பேரெழிலை மறக்கவோ?
பேதை நீ அய்யுற்றால்; பெற்றிடுக கணையாழி!
(குழப்ப ஒலி)
என் கையில் சின்னாள் இருந்தவளை மறக்கினும்;
என் கையின் பன்னாட் கணையாழி மறக்கிலேன்!

துஷ்யந்தன் : கணையாழி... கணையாழி...
மறந்தனை துஷ்யந்த! மறந்தனை மங்கையை!
முன்னொரு நாளில் பிரிவை நினைந்து – சகுந்தலை
வாட்டம் உற்றதால் கழன்றதே கை வளை –அவள்
வாட்டம் போக்கிட வழியிலா உந்தன்–
நாட்டமில் சிந்தையை நொந்தே – கை
நழுவியே கங்கையில் வீழ்ந்ததே மோதிரம்!

நினைவுக்குரல்: வேசியே, எவனோ கொடுத்த பெரும்பழி தனக்கு,
என்னைத் தகப்பன் ஆக்கிட நினைத்தனை!

துஷ்யந்தன் : ஐய்யோ! எதையும் யோசிக்காது–
என்னை நாடிய என் கண்மணியை;
துன்புறுத்தினனே; துடித்திட வைதேன்!
தூயவள் தன்னைத் துடித்திட வைத்தேன்!
சகுந்தலை என்னை மன்னித் திடுக – என்னுளம்
புகுந்தலை அன்றுன் அரற்றல் மொழிகள்!
எங்குத் தேடுவேன் எந்தன் உயிரை!
எங்கும் தேடுவேன் எந்தன் உயிரை!
எங்கும் தேடுவேன் எந்தன் உறவை!
சகுந்தலை ..... சகுந்தலை...!
(விரைந்து செல்லல்)

– திரை –

# காட்சி – 26

இடம் : கானகத்தில் சகுந்தலை குடில்

இருப்போர் : சகுந்தலை, துஷ்யந்தன்

நிலைமை : (சகுந்தலையைத் தேடித் துஷ்யந்தன் கானகம் வரல்– சகுந்தலை தன் விதியை நினைந்து வேதனைப்படல்)

சகுந்தலை : விதியின் நாயக! முடித்திடு எந்தன்
வேதனை உயிரை! வெறுமை வாழ்க்கையை! – ம்
என்னால் எப்படி இறந்திட முடியும்?
என் மகன் பரதன் எனக்கென இருக்கையில்
மூன்று முனிவர்கள்! எந்தன் வாழ்வில்
முதல்வர் பிரம்மனாய் என்னைப் படைத்தார்!
இரண்டாம் தவத்தோன்! திருமாலாய்க் காத்தார்!
மூன்றாம் முனியோ முடித்தார் என்கதை!

– அன்று

பதியின் வசைகள் பதிந்த மனத்தில் – இன்று
பரதன் மழலையும் சிரிப்பும் பதிந்தது!
பரதன்..... பரதன் எனதரும் செல்வம்!
மன்னவன் பொலிவு – மகனின் முகத்தில்;
என்றும் கண்டு இன்புறு வேன் யான்!
மன்னவன் துணிவு – என்கண் மணிக்கு – இவன்
மகிழ்வுச் சிரிப்பு அவர் உருகாட்டி;
எந்தன் மனத்தே எழுப்பும் புயலும் – இவன்
சிந்தும் புன்னகை – என் சிந்தை மாற்றும்.
துன்பம் தருவதும் பரதன் புன்னகை!
இன்பம் தருவதும் பரதன் புன்னகை!
ஆகா புலியின் குட்டியும் சிங்கக் குட்டியும் – இவனது
புதுமைத் தோழர் புரள்வர் ஒன்றாய் – ம்
பின்னொரு நாள் இவனை;

நலியச் செய்யும் தந்தையின் நினைவு – அதற்கு
நான் என் செய்வேன் நான் என் செய்வேன்!!
ஏனோ எந்தன் இடக்கண் துடிப்பது ? – துடித்திடும்
எந்தன் மனதை ஏளனம் செய்யவோ ? – ஆ
வீணாய்ப் போய்விடும் உலையில் சோறு...
விரைந்து சென்று அவிப்போம் நெருப்பை – ம்...

(சற்று நின்று பெருமூச்சுவிட்டு)

என் மன நெருப்பை எப்படி அவிப்பது ?

(குடிலுக்குள் செல்லுதல்)

(துஷ்யந்தன் வருதல்)

துஷ்யந்தன்: தேடா இடமிலை! திக்கிலை யானும்!
தேறிடா மனத்தொடு திசை பல அலைந்து
ஓடாய் இளைத்தேன்! ஓடிக் களைத்தேன்!
ஓவியப் பாவையை எங்கும் காணேன்!

(புலிக் குட்டியோடு விளையாடும் பரதனைப் பார்த்து)

யார் இச்சிறுவன் ?
புலியின் குட்டியும் – இச்சிங்கக் குட்டியும் – விளையாட்டாய்
பொருதிக்கொள்வது பொருத்தம்! பொருத்தம்! – இருப்பினும்
இப்படிப் பிள்ளையைப் பழக்கி விட்டது–
என்றும் நல்லதோ சொல்லுவம் குடிலில் .... ம்
எந்தன் மகவும் இருந்தால் இன்று;
இப்படித் தானே பொலிவாய் இருக்கும்!
யாரது குடிலில் யாரது குடிலில் ?
இப்படிப் பிள்ளையைப் பழக்குதல் முறையில!

சகுந்தலை: (குடிலில் இருந்த படியே)
ஆ... என்ன நேர்ந்தது என் கண்மணிக்கு!
(வெளியே வந்து)
எங்கென் செல்வன்! எங்கென் பரதன்!
பரதா.... பரதா! யார்! – யார்! ஆ... தாங்களா?

துஷ்யந்தன்: சகுந்தலை! சகுந்தலை!
கண்ணின் மணியே! காதற் பாவாய்!
காலங்கடந்து நினைவைப் பெற்றேன்!
பெண்ணின் நல்லோய்! பெரும்பிழை செய்தேன்!
பொறுத்தாய் அதனை; வெறுத்தாய் இல்லை,
மன்னித்திடு! என்மனை மங்கலமே!
மன்னித்திடு! இம் மாபாதகனை!

(பாடல்)

உன்னுருவம் நான் மறந்தேன்!
உன் நினைவில் நான் இருந்தேன் – என்
கண்மணியே நீ கலங்க நான் பிரிந்தேன்! (உன்னுருவம்)

கண்ணில் கலந்த காட்சி மறந்தேன்!
கனிவில் மலர்ந்த காதல் துறந்தேன்!
என்னுயிரே என்இதயம் நானிழந்தேன்! (உன்னுருவம்)

இன்பம் அழித்துத் துன்பம் அளித்தேன்!
இதயம் கெடுத்து இன்னல் கொடுத்தேன்!
என்னுயிரே என் தவறை நானுணர்ந்தேன்! (உன்னுருவம்)

சகுந்தலை! என்னை மன்னித் திடுக –
நறுமலர் நாடும் வண்டாய் உன்னை;
நானும் நாடித் தேனை உண்டபின்–
பிரிந்தேன், பின்னை! மறந்தேன் உன்னை!

சகுந்தலை: காலம் செய்த சதியை நினைந்து;
கலங்க வேண்டாம் காதல் மன்னவ!

துஷ்யந்தன்: சகுந்தலை.... சகுந்தலை! இது என் மகனா?
சகுந்தலை: ஆம். நம் மகன் பரதன்!

துஷ்யந்தன்: பரதன் என் மகன்! என் மகன் பரதன்!! –
சகுந்தலை!
எல்லாம் மறந்து ஏகுவம் நமதூர்;
எந்தன் கண்ணே! பரத இங்கு வா!
(பரதன் ஓடிவரல்)
துஷ்யந்தன் சகுந்தலையையும் பரதனையும்
அணைத்து மகிழ்தல்!

– திரை –

– நலம் –

வெ.எண் : 769

**சாகுந்தலம் (கவிதை நாடகம்)**

**விலை : ₹ 75.00**


